# சக்தி காரியாலயம்

புத்தக வியாபாரம்

115-E, மோபரிஸ் ரோடு, சென்னை-14

ராஜாஜி, டி. கே. சி., கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர், ஸ்ரீ வையாபுரிப் பிள்ளை, ஸ்ரீ ஆர். பி. சேதுப் பிள்ளை, ஸ்ரீ. வெ. சாமிநாத சர்மா, டாக்டர். மு. வரதராசன், ஸ்ரீ மு. அருணாசலம், ஸ்ரீ அண்ணாதுரை, கவிஞர் பாரதிதாசன், கல்கி, 'லக்ஷ்மி', க. சந்தானம், வ. ரா., புதுமைப் பித்தன், டால்ஸ்டாய், உ. வே. சாமிநாதய்யர் எழுதிய நூல்களும், மற்ற உயர்தரமான தமிழ் நூல்களும் எங்களிடம் கிடைக்கும்.

○

**வியாபாரிகளுக்கும், லைப்ரரிகளுக்கும், பள்ளிக்கூடங்களுக்கும் நல்ல கமிஷன் உண்டு.**

விலைப்பட்டியலுக்கு எழுதுங்கள்.

மார்ச் 54

# குழந்தைகளின் வாரப் பத்திரிகை






ஆசிரியர்: அணில் அண்ணன்

- ★ தொடர்கதை, நீதிக்கதை, நவீனக்கதை, பாட்டிக்கதை — இன்னும் பல கதைகள்
- ★ விநோதம், விசித்திரம், அதிசயம்,
- ★ விடுகதை, பழமொழி, படித்துப்பார், எழுதிப்பார் கேள்வி-பதில், அன்றாடச் செய்தி, தெரியுமா?, தெரிந்து கொள்ளுங்கள்,
- ★ இத்தனைக்கும் நீங்கள் ஒவ்வொரு வாரமும் செலவு செய்ய வேண்டியது ஒரே ஒரு அணாதான்

வருட சந்தா ரூ. 3. இரண்டு வருடங்களுக்கு ரூ. 5.

**சக்தி காரியாலயம், சென்னை-14**

# பொருளடக்கம்

மார்ச், 1954

மலர் 18 இதழ் 5





விஜய  மாசி



வருடசந்தா ரூ. மூன்று

தனிப்பிரதி அணா நான்கு

விஜய
மாசி

# சக்தி

மலர் 18
இதழ் 5

மெய்ப்பொருள் காண்பது அறிவு

○

## ஈடு செய்யமுடியாத நஷ்டம்

●

ரசிக மணி. டி. கே. சி. நம்மை விட்டு பிரிந்துவிட்டார். தமிழுக்காக அவர் செய்த சேவையைத் தமிழ் மக்கள் மறக்கமுடியாது.



தமிழ் இலக்கியத்துக்காகவும், தமிழ் மக்களுக்காகவுமே அவர் தம் வாழ்க்கையை அர்ப்பணித்திருந்தார். தமிழ் மொழி, இசை இவற்றிற்காக அவர் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது. நமது இலக்கியங்களை எப்படிப் படிக்க வேண்டும், எப்படிச் சொல்லித் தரவேண்டும் என்பனவற்றை தமது சொல்லிலும் செயலிலும் நமக்குத் தம் வாழ் நாள் முழுதும் காட்டி வந்தார்.

மறைந்து மூலைமுடுக்குகளில் இருந்த கவிதைச் செல்வங்களைத் தேடி அவைகளின் பெருமையை நமக்கெல்லாம் எடுத்துச் சொல்லி வந்தார். உண்மையான, ஆழமான கவிதைகளைத் தான் சொல்ல வேண்டும், குப்பைகளாக இருந்தால்—இயற்றியவர் யாராக இருந்தாலும்—அதைத் தூர எடுத்து எறிந்து விடவேண்டும் என்ற உயரிய கொள்கையைத் தம் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்.

கம்ப ராமாயாணத்தின் மீது அவருக்குள்ள ஈடுபாடு யாவரும் அறிந்ததே. கம்பனது கவிதைக்களில் உள்ள நயங்களைத் தமக்கே

உரித்தான நடையில் அழகழகாக எடுத்துச் சொல்லிவந்தார். இதன் காரணமாகக் கம்பராமாயாணத்தைப் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தைத் தமிழர்களுக்கு உண்டாக்கினர். கம்பனது காவியத்தை ஆராய்ந்து அவர் கண்ட முடிவுகள் பலரது கண்டனத்துக்கு உட்பட நேரிட்டது. ஆயினும் தாம் கொண்ட கருத்துக்களையும் முடிவுகளையும் இடைவிடாமல் பிரசாரம் செய்து வந்தார். அவரை எதிர்த்தவர்கள் கூட அவரது சீரிய புலமையையும், தமிழ் ஆர்வத்தையும் பாராட்டினர். அவரிடம் அளவு கடந்த மரியாதை வைத்திருந்தனர்.

அவரது மறைவு தமிழ் நாட்டுக்கு ஈடு செய்ய முடியாத நஷ்டம். அவரது மறைவால் உளம் கலங்கியிருக்கும் அவரது குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். *

## இந்தியாவின் குரல்

பாகிஸ்தானுக்கு அமெரிக்க ராணுவ உதவி யளிக்கத் திட்டமிட்டிருப்பதைப்பற்றி இந்தியப் பிரதமர் நேருவின் அறிக்கை உலகெங்குமுள்ள மக்கள் வரவேற்பர். நேருவின்திட்டவட்டமான இந்த அறிவிப்பு இந்திய மக்களின் குரலைப் பிரதிபலிக்கிறது.

பாகிஸ்தானுக்கு அளிக்கப்படும் ராணுவ உதவி எந்த விதத்திலும் இந்தியாவின் நலனுக்குப் பாதகம் விளைவிக்காது என்று கூறியிருக்கிறார் அமெரிக்க ஜனதிபதி ஐஸன் ஹோவர். அத்துடன் நில்லாமல் தாங்கள் அளிக்கும் ராணுவ உதவி துஷ்பிரயோகம் செய்யப் பட்டால் ஐ. ந. சபை மூலம் தக்க நடவடிக்கை எடுக்க அமெரிக்காவே முன் முயற்சி எடுக்கும் என்றும் ஐஸன் ஹோவர் தெரிவித்திருக்கிறார். இது வெறும் பசப்பு வார்த்தைகள் தான் என்பது சரித்திரம் நிரூபித்திருக்கிறது. காஷ்மீர் பிரச்னையில் அமெரிக்காவின் பங்கு, அவர்களின் சதித்திட்டங்கள் சமீப காலத்தில் மக்கள் முன் நன்கு தெளிவாக்கப் பட்டிருக்கின்றன. பாகிஸ்தானைத் தன்னுடைய கைப்பாவையாக வைத்து ஆசிய மக்களுக்கு எதிராக ஆசியரையே தூண்டிவிட அமெரிக்கா முயலுகிறது என்று ஆசிய நாடுகள் நினைக்கின்றன. தினசரி நிகழ்ச்சிகள் இந்த சந்தேகத்தையே ஊர்ஜிதம் செய்கின்றன.

பாகிஸ்தான் பிரதம மந்திரியே காஷ்மீர் பிரச்னையில் தீர்வு காண்பதற்காகத் தான் அமெரிக்கராணுவ உதவி பெறப்படுகிறது என்று கூறியிருக்கிறார். பாகிஸ்தான் பிரதம மந்திரியின் பிரசங்கம் ஒன்றே அமெரிக்க, பாகிஸ்தான் ஆளும் வர்க்கங்களின் உள்ளக்கிடக்கையைத் தெளிவாக்கப் போதுமானது. ஆகவேதான் பிரதமர் நேரு காஷ்மீரத்தில் உள்ள அமெரிக்கப் பார்வையாளர்களை இனி மேலும்நடுநிலைமையாளர்கள் என்று கருத முடியாது; அவர்கள் உடனடியாக வாபஸ் வாங்கப்படவேண்டும் என்று கூறியிருக்கிறார். நேருவின் இந்த அறிக்கையை நாம் மனபூர்வமாக வரவேற்கிறோம்.

அமெரிக்க பாகிஸ்தான் ராணுவ ஒப்பந்தத்துக்கு எதிராக இந்திய சர்க்கார் எடுக்கும் உறுதியான நடவடிக்கைகளை இந்திய மக்கள் பரிபூரணமாக ஆதரித்து நிற்பர் என்றும் உறுதி கூறுகிறோம்.

# ஆசிரியர் சுந்தரம் பிள்ளை

பேராசிரியர் எஸ், வையாபுரிப் பிள்ளை

●

தமிழ்நாட்டுப் பேரறிஞருள் ஒருவர் ஆசிரியர் சுந்தரம்பிள்ளை. அவர் இயற்றிய மனோன்மணீயம் தமிழ் மொழி உள்ள காலம் வரையும், தமிழ் மக்கள் உள்ள காலம் வரையும் நாடக நூல்களுக்குத் தலைவரம்பாக நின்று நிலவும். ஞானசம்பந்தரது காலத்தைக் குறித்து அவர் ஆங்கிலத்தில் எழுதியுள்ள ஆராய்ச்சி நூல், கால—ஆராய்ச்சி செய்யும் முறைக்கு முன்மாதிரியாய் விளங்கும். திருவிதாங்கூரிலுள்ள பூர்வ கல்வெட்டுக்களை வாசித்து இத்தேசத்துச் சரித்திரத்தைப் புராண வரலாற்றுக் குப்பையினின்றும் மீட்டி, அதனைத் துலக்கியதும், இங்கே சிலாசாசன இலாக்காவை நிறுவியதும் தேச சரித்திரக்காரர் கையாள வேண்டும் நெறிகளிலொன்றைப் புலப்படுத்தும் ஒரு கலங்கரை விளக்கமாய்த் திகழும். நெடுநல்வாடை, மதுரைக் காஞ்சி முதலிய அரிய சங்க—இலக்கியங்களை ஆங்கில மொழியிற் பெயர்த்துச் சுவைபெற எழுதி, பலரும் அவற்றின் அழகினையும் சுவையையும் நுகரும்படி செய்து, பண்டைப் புலவர்களது பெருமையையும் பண்டைத் தமிழகத்தின் சிறப்பியல்புகளையும் நாகரிகத்தையும் பண்பாட்டினையும் குன்றின் மேலிட்ட தீபம் போல் ஒளிர்ந்து பிரகாசிக்கும்படி அவர் செய்தது ரசிகத்தன்மைக்கும் கவித்வ சக்திக்கும் பாவனுசக்திக்கும் மொழி பெயர்ப்பாற்றலுக்கும் ஒரு பேரெல்லையாக, எடுத்துக்காட்டாக இலங்குகிறது. மக்களது அறிவு நூற்பரப்பை அளவிட்டு, பல பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொன்றின் சிறப்பியல்பையும் புலப்படுத்தி அவர் இயற்றிய நூற்றொகை விளக்கம் விஞ்ஞான சாஸ்திரப் பரப்பினை நமக்கு உணர்த்தும் அறிவுரைக் கருவூலமாக அமையும்.

இவைகளெல்லாம் ஒரு பெருங் கடலிலே கரையோரத்திலே வந்து மோதி விளையாடி மீளும் அலைகளுக்குச் சமானமே. கடலின் ஆழமும் பரப்பும் நமக்குப் புலப்படவில்லை. ஆசிரியர் உயிர் வாழ்ந்திருந்த காலத்திலே, அவரோடு நெருங்கிப் பழகியவர்களுக்கு அவரது உள்ளக் கடலின் வேறு சில அம்சங்களும் விளக்கமாயிருந்தன. அவரது அடக்கத்தைப் பற்றி அவரது ஆசிரியர் டாக்டர் ஹார்வி வியந்து கூறியுள்ளார். அவரது தெய்வ பக்தியும், குரு பக்தியும் பெற்றோர்மீது கொண்டுள்ள பக்தியும் அவரது வாழ்விற்குச் சிறப்பு நல்கி, அவருடன் பழகிவர்கட்கெல்லாம் வியப்பை அளித்து வந்தன. அவரது தமிழ்த் தெய்வ பக்தி தமிழ் மக்களுக்கு லட்சியமாய்த் திகழ்ந்தது. அவரது ஆத்மஞானப் பெருமை தனிப்பட எடுத்துக் கூறுந்தகையது. அவரோடு கூடியிருந்து அளவளாவி

தமிழிலே நாடக நூல் இல்லாக் குறையைத் தவிர்த்த பெரு நூல் மனோன்மணியம். இதன் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை கூறியிருக்கின்ற தமிழ்த் தெய்வ வணக்கத்தை எடுத்தாளாதவரே இன்று கிடையாது. இவரைப்பற்றியும், இவரது நாடகத்தைப் பற்றியும் ஆராய்ச்சி தான் இந்தக் கட்டுரை.

பிருக்குங் காலம் அவரது நண்பர்களுக்குத் தம் வாழ்விலே போற்றி நினைக்கத்தரும் அரிய இனிய பொழுதாக மகிழ்ச்சி விளைத்து வந்தது. சென்ற சென்ற இடமெல்லாம் அவரைக் கண்டு அளவளாவுதற்கு அறிஞர்கள் நெருங்கி வந்து கொண்டிருந்தனர். கௌரவமும் ரஸிகத் தன்மையும் ததும்பும் அவரது சொற்பொழிவுகள் அறிவும் இன்பமும் ஒருங்கே விளைத்துக் கேட்போர்க்கு உண்ணவுண்ணத் தெவிட்டாத நல் விருந்தாய் அமைந்திருந்தன. கலாசாலை ஆசிரியர் என்ற நிலையிலே அவர் தமது வகுப்புக்களில் போதித்து வந்தபொழுது அவரது அற்புதமான அமுத தாரைகள் மாணவர்களைப் பரவசப்படுத்தி மகிழ்வித்து வந்தது. அரிய கருத்துக்களை எளிய உதாரணங்களால் இனிதின் விளக்கும் அவரது பேராற்றலை மாணவர்கள் வியந்து கொண்டாடி வந்தனர். அறிவாற்றலால் நிரம்பி விளங்கிய அவரது முகமண்டலம் மிக இனியதோர் அரிய காட்சியாய்த் திகழ்ந்தது. இந்த அம்சங்களையெல்லாம் நமக்கு முந்திய தலைமுறையாரிடமிருந்தே நாம் கேள்வி மூலம் அறிய வேண்டியவர்களாயுள்ளோம். நாம் நுகர்ந்து இன்புறுதற்கு இவை எட்டாதனவாய்ப் போயின.

இவ்வாறே இவ் ஆசிரியரிடமிருந்து நமக்குக் கிடைக்கக்கூடிய நூற் செல்வங்களையும் இவரது அகால மரணத்தால் நாம் இழந்து விட்டோம். கலாசாலையில் இவர் போதித்து வந்ததும், இவரது ஆன்மா துடித்து அவாவிக்கொண்டிருந்ததும் தத்துவ சாஸ்திரம், சரித்திரம் என்ற இரண்டு கல்விப் பொருள்களாம். தத்துவ சாஸ்திரம் பற்றிய அளவில், மேனாட்டு அறிஞர்களின் கொள்கைகளையும் நமது நாட்டு அறிஞர்களின் கொள்கைகளையும் நன்கு ஆராய்ந்துணர்ந்தவர்களுள் இவர் முன்னணியில் நின்றவர். மேனாட்டுத் தத்துவக் கொள்கைகளை முறைப்பட நுட்பமாயுணர்ந்து பலரும் உவந்தேற்கும் வண்ணம் நம் தாய் மொழியாகிய தமிழில் எழுதக்கூடிய ஆற்றல் படைத்தவர்கள் இன்றளவும் தோன்றியதில்லை யென்றே கூறலாம். இந்நனமொரு தத்துவ நூல் இயற்ற வேண்டுமென்று இவர் கருதியிருந்ததாகச் சில சான்றுகளும் உள்ளன. பல விஞ்ஞான சாஸ்திரப் பகுதிகள் பற்றியும் முக்கியமாய்த் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களைத் தொகுத்துப் பல நூல்கள் இயற்ற வேண்டும் என்றும் கருத்துக் கொண்டிருந்தார். இது இவரது நூற்றொகை விளக்க முன்னுரையால் விளங்குகிறது.

சரித்திரம் பற்றிய அளவில், அது புரட்சி நிலை அடையத்தக்க வண்ணம் ஒரு நூதன கோணத்தினின்று நோக்கப்படுதல் வேண்டுமென்று வற்புறுத்தி வந்தனர். இந்திய சரித்திரமும் நாகரிகமும் கங்கைப் பிரதேசத்திலிருந்து தொடங்குவதாகக் கொள்ளுதல் தக்கதன்று; பொருநை நதி, காவேரி நதி முதலிய தீரங்களிலிருந்து அது தொடங்கப்படுதல் வேண்டுமென்று கூறி வந்தனர். மொஹெஞ்சதரோ, ஹரப்பா முதலிய சிந்து நதிப் பிரதேசத்திலிருந்த நாகரிகமும் பண்பாடும் அறியவராத காலத்திருந்தவர் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை. இந்தப் பிரதேசத்துப் பண்டை நாகரிகம் திராவிட நாகரிகத்தோடு இயைபுடையதாகலாம் எனப் பல ஆராய்ச்சியாளரும் கருதுகின்றனர். எனவே, நமது ஆசிரியர் எவ்வளவு தீர்க்கதரிசனத்தோடு சரித்திர நெறியை உணர்ந்துள்ளாரென்பது விளங்கும். அன்றியும் தேச சரித்திரத்திற்குக் கண்கள் போன்றுள்ளவை கல்வெட்டுக்கள், தாமிர சாசனங்கள் முதலியவை. இவற்றின் துணை கொண்டுதான் சரித்திர நிர்மாணம் செய்தல் வேண்டுமென்ற உறுதிப் பாட்டுடன், உடல்—நிலையையும் கவனியாது தாமே பொருட்செலவு செய்து பல

இடங்களுக்கும் சென்று கல்வெட்டுக் களை ஆராய்ந்து சரித்திரம் எழுத முன் வந்தனர். இம் முயற்சியில் இவருக்கிருந்த ஆர்வத்தையும் ஆற்றலையும், பரிசிலனை செய்யும் முறையையும் டாக்டர் ஹுல்ட்ஜ் முதலிய சரித்திரப் பேரறிஞர்கள் வாயாரப் புகழ்ந்துள்ளனர். காலம் அனுமதித்திருக்குமாயின், இவ்வகையில் எத்தனையோ அரிய நூல்களை இயற்றியிருப்பர். நமது தேச சரித்திரமும் பெரிதும் வளர்ந்தோங்கியிருக்கும்.

நமது ஆசிரியர் தெய்வமாகப் போற்றி வந்தது நம் தாய் மொழியாகிய தமிழையே. பண்டைத் தமிழ்—இலக்கியங்களின் பெருமையைத் தமிழ் மக்களேயன்றிப் பிற மொழி மக்களும் அறிந்து இன்புறற் பொருட்டும், தமிழ் மொழியின் புகழ் உலகெங்கும் பரவுதற்பொருட்டும், அவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தல் வேண்டும் என்று கருதியிருந்தனர். இக் கருத்துக்கிணங்கவே, நெடுநல்வாடை, மதுரைக் காஞ்சி முதலியவற்றை மொழி பெயர்த்தனர். இவ்வகையிலும் பல மொழிபெயர்ப்பு நூல்கள் இயற்றித் தமிழின் புகழை வளர்த்திருத்தல் கூடும். இவை தவிர, மனோமணீயம் போன்ற பெருஞ் சிறப்புள்ள நூல்கள், பல 'புதுப்பணி'யாக இவர் இயற்றியிருத்தலும் கூடும்; இவற்றால் தமிழ்ச் செல்வமும் மிகுதியாய் ஈட்டப்படுதற்கும் வாய்ப்புக்கள் கிடைத்திருக்கும்.

தமது மரண காலத்திற்குச் சிறிது முந்தி, இவர் மேற்கொள்ளக் கருதியிருந்த முயற்சியொன்றைப் பற்றி இங்கு கூறவேண்டியது அவசியம். தமிழிலக்கிய வரலாறு இன்று காறும் செவ்விய முறையில் எழுதப் பெறவில்லை. இதனை எழுதி முற்றுவித்துக் கொடுக்கும்படி ஆங்கிலக் கம்பெனி யொன்று இவரை வேண்டிக்கொண்டது. அதற்கு இணங்கி, வேண்டும் நூல்களையெல்லாம் வரவழைக்க ஏற்பாடு நமது ஆசிரியர் செய்திருந்தனர். இவர் இலக்கிய வரலாற்றை எழுதி முடித்திருப்பாராயின் எத்தனையோ சிறந்த ஆராய்ச்சி நூலாக அது அமைந்திருக்கும். இத்தகைய நூல்களை நாம் பெறும் பாக்கியமும் நமக்கு இல்லாமற் போயிற்று.

நமது ஆசிரியரது பெயர் விளங்க இவர் வெளியிட்டுள்ள நூல்களெல்லாம் இவர் வைத்துவிட்டுப் போன ஞாபகச் சின்னங்களே. இவர் தமது 42-ம் வயதிலே, என்றுந் தணியாத துன்பத்திலே நமது நாடு முழுவதும் வருந்த, மறைந்து போயினர். மக்களுக்கு விதித்துள்ள ஆயுள்வரை அவர் வாழ்ந்திருப்பாராயின், எத்தனையோ அரிய நூல்களை இயற்றியிருப்பர். தமது நுண்மதியும், பேராற்றலும், கவித்வ சக்தியும் விளங்க எத்தனையோ கவிதை நூல்களையும் நாடக நூல்களையும் இயற்றிப் பிறராற் செய்தற்கரிய சேவைகளைத் தமிழன்னைக்குச் செய்திருப்பர்.

இவைகளெல்லாம் 'நிகழக்கூடும்' என்ற சொல்லளவு மாத்திரமாகவே உள்ளது. எக் காரணத்தால் இந் நம்பிக்கை நமக்கு உண்டாயிருக்கிறது? ஆசிரியரது மேதைதான் காரணமென்று துணிந்து சொல்லலாம். இம் மேதையும் நமது ஆசிரியர் தமிழ் நாட்டினர்க்கென ஈட்டி வைத்துள்ள அரிய இலக்கியச் செல்வங்களை நோக்கிய அளவில் நமக்குத் தெளிவாய்ப் புலப்படுகிறது. கடலிலிருந்து நன்முத்துக்கள் மிகப் பல வாய்ப் பெறுகின்றோம். பெற்ற அளவு கொண்டு, கடலின் பெருமையையும் வளத்தையும் முற்ற அளந்து கட்டிவிட்டோம் என்று யாரேனும் கூறத் துணிவார்களா? ஒரு சிறந்த ஆசிரியர் இயற்றிய நூல்களிலே அவனது பெருமை முழுதும் அடங்கி விடுவதில்லை. அந் நூல்களைக் காட்டினும் அவனது பெருமை மிக மேம்பட்டது என்பது அறிஞரனைவரும் ஒப்புக் கொள்ளும் ஓர் உண்மை. எனினும், அவைகளை

அப்பெருமையின் ஓர் அளவு கோலாக நாம் மதித்துக் கொள்ள லாம்.

நமது ஆசிரியர் தந்துள்ள இலக்கியச் செல்வங்களிலே தலைசிறந்தது மனோன்மணீயம் ஆகும். இந்நாடகத்தின் சிறப்பை உணர்தற்கு இதற்கு மூன் தமிழில் நாடகமும் நாடக அரங்கும் எத்தன்மையவாயிருந்ததென்று நோக்குதல் வேண்டும். இராம நாடகம், சகுந்தலை நாடகம், அரிச்சந்திர நாடகம், நல்ல தங்காள் நாடகம் முதலியவை உதாரணங்கள். இவைகள் பெரும்பாலும் கீர்த்தனை வடிவில் அமைந்திருந்தன. வசனப் பகுதி மிகச் சிறிதளவே. சம்பாஷணை முதலிய எல்லாம் சங்கீத முறையே. நடிப்பவர்கள் சங்கீதத்தில் மிக வல்லவர்களாயும் சாரீர இனிமையும் ஆற்றலும் பெரிதும் வாய்ந்தவர்களாவும் இருந்தனர். 'ஸ்திரீ பார்ட்டும்' இளைஞர்களே நடித்தனர். பக்கப் பாட்டு அல்லது பின்னணி சங்கீதம், நடிப்பவர் இசைப் பாட்டிற்கு ஒத்திணக்கி, விஸ்தாரமாயிருந்தது. இரவு 8 மணிக்கு நாடகம் தொடங்கி, 2½ அல்லது 3 மணிவரை நிகழ்ந்து முடிவாகும். சில நாடகங்கள் விடிய விடிய நடத்தலுமுண்டு. பெரும்பாலும் சங்கீத ரஸிகர்களும் மிகக் கீழ்த்தர மக்களும் நாடகத்திற்குச் சென்று வந்தார்கள். நாடகக் கொட்டகையும் தற்காலிகமாய் அமைந்திருந்தது. அடிக்கடி இழிசெயல்களும், கலகங்களும், தீப்பிடித்தலும் இங்கே நடைபெற்றன. படுமோசமான இந் நிலையினின்றும், நாடகத்தை மீட்க வேண்டுவது அவசியமாயிற்று.

இதற்கு, நாடகச் சுவை பெருக, மேனாட்டு முறைகளை அனுசரித்து, நாடகங்கள் இயற்றச் சிலர் முன் வந்தனர். தாசில்தார் நாடகம் முதலியவை இவ்வகையைச் சார்ந்தவை. இவைகளும் பூர்வ நெறியை ஓரளவு போற்றியே வந்தன. மேனாடு சென்று திரும்பியவர்களிற் சிலர் முழுதும் வசனமாகவே சில நாடகங்கள் இயற்றினர். பிரதாப சந்திர விலாசம் இதற்கு உதாரணம். ஆனால், இந் நாடகங்களில் ஆங்கில சம்பாஷணைகளையும் உட்புகுத்தி உருவக்கேடு செய்துவிட்டனர். வசனத்தோடு சில அம்சங்களில் ஒற்றுமை உடையதாயும் வேறு சில அம்சங்களில் செய்யுளோடு ஒற்றுமையுடையதாயுமுள்ள அகவற்பா தமிழ் நாடகத்திற்குத் தக்கதாகும் என்ற கருத்து முதன் முதலில் ஆசிரியர் சுந்தரம் பிள்ளையின் மனத்தில் உதித்தது. ஷேக்ஸ்பியர் பேராற்றலோடு கையாண்ட (Blank verse) என்பதற்கு இதுவே நெருங்கிய ஒற்றுமையுடைய தென்பதும் நாம் இங்கே மனங்கொள்ளத் தக்கது. ஓர் அறிஞர் இந்த ஆங்கில யாப்பிற்கு ஐந்துசீர் இருக்க வேண்டும் என்று கருதி, ஐந்து சீருள்ள கட்டளைத் கலித்துறையடிகளை அமைத்து, 'வீல நாடகம்' என்ற நாடகத்தை இயற்றினர். இந் நாடகம் எவ்வாறு வழங்காது போயிற்றோ, அவ்வாறே கலித்துறையடிகளும் நாடகத்திற்கு வழங்காது போயிற்று. இந்த அறிஞர்தாமே பின்பு இவ்வகை அடிகளை மேற்கொள்ளாது, வசனத்தில் நாடகம் இயற்றத் தொடங்கினர்.

நமது ஆசிரியருக்குப் பின், அவர் மேற்கொண்ட அகவல் அடிகளையே வழங்கி, வேறு சில அறிஞர்களும் நாடகங்கள் இயற்றினர். அவற்றுள் ஒன்று 'வெனிஸ் வர்த்தகன்' என்ற நாடகம். இதுஒரு மொழிபெயர்ப்பே ஆகும்; இதன் ஆசிரியரிடத்தே மொழிபெயர்ப்புத் திறன்மாத்திரமே எதிர்பார்க்கலாம். பிறிதொன்று வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் இயற்றிய 'மான விஜயம்' என்பது. இது ஒரு சுயசிருஷ்டியே; ஆனால் இதன் நடை மிக உயரிய செந்தமிழ் நடை; நாடகப் பொருளும் சிறந்ததெனக் கூற முடியாது; இதன் அமைப்பும் செல்கதியும் நயமுடையன அல்ல. இவற்றிற்கு மாறாக, நயமுடைய அகவலைக் கை

யாளுதலில் சுந்தரம் பிள்ளை தலை சிறந்தவரென்பதில் ஐயமில்லை.

வசனத்தில் அமைக்காது கவிதையாக அமைத்தது பொருத்தமில்லை எனப் பலருங் கருதுவர். இக் கேள்வியைப் பரிசீலனை செய்த மேனாட்டு அறிஞர்களது ஆராய்ச்சி முடிபு நேர்மாறாக உள்ளது. இயற்கையைப் பிரதிபலித்தல்தான் நாடகத்தின் நோக்கம் என்பது பாதியுண்மையே யன்றி முழு உண்மையன்று. நாடகங்காணும் அவைக்களத்தோரை உணர்ச்சி வசமாக்கி, அவ்வுணர்ச்சியை நுகருமாறு செய்வதே நாடகத்தின் நோக்கமாகும். அன்றியும் நாடகத்திற்கு ஓரளவு செயற்கை இன்றி யமையாதது. அரங்கு நிகழ்ச்சியில் பல உட்கிடை மரபுகள் (Conventions) உள்ளன. காலமும் இடமும் பற்றிய நாடக மரபு அவற்றுள் ஒன்று. இயற்கையுலகில் பல ஆண்டுகளாக நிகழுஞ் செய்திகளைச் சில மணிக்கூறுகளில் நாடக—அரங்கில் நிகழ்த்துவர். இது இயற்கையொடு பொருந்துவதாகுமா? இங்ஙனமே பலவகை இயற்கைக் காட்சிகளும் தோற்றங்களும் நாடக அரங்கில் உள்ளனவாகப் பாவனை செய்து கொள்ளுகிறோம். இது இயற்கையொடு பொருந்துமா? இந் நியாயங்கள் ஒருபுறம். நாடகங்கள் துன்பியல் நாடகம் இன்பியல் நாடகம் என்று இருவகைப்படும். இவற்றுள் துன்பியல் நாடகங்களின் பலவகை உணர்ச்சிகளும் கவிதையிற் புலப்படுதல் போல, வசனத்தில் புலப்படமாட்டா. அன்றியும், உரையாடலும் தனிமொழி முதலிய பேச்சுக்களும் கவிதையில் அழகுற அமைந்து சிறந்து விளங்குவதுபோல், வசனத்தில் விளங்கமாட்டா. இன்பியல் நாடகங்களிலுங்கூட, கதைப் பொருள் சாதாரண வாழ்க்கைக்கு அப்பாற்பட்டு, தேவதைகள், அசாதாரண நிகழ்ச்சிகள் முதலியவற்றிற்கு இடந்தரும்பொழுது, கவிதை—நாடகமே தக்கது; வசன நாடகம் தக்கதன்று. இவை போன்ற பல காரணங்களாலும், கவிதை நாடகமே சிலவகை நாடகங்களுக்குப் பொருத்தமாதல் எளிதில் உணரலாம்.

இவருடைய நாடகத்தில் பிரதானமாய் அமைந்துள்ள காதற் பொருள் ஒரு கனவு மூலமாய் நிகழ்வது. இங்ஙனம் காதல் கொள்ளும் மனோன்மணி ஜீவக வழுதியின் ஏக சந்தானம். இவள் அருளுருவாகிய சுந்தர முனிவரின் கருணை நிழலிலே வளர்ந்த ஓர் அழகிய பூங்கொடி. இவ் இளவரசியின் காதற் பாத்திரமும் சுந்தர முனிவரின் அருளுக்குரிய புருஷோத்தமன் என்ற சேர அரசனே. இவனும் கனவின் மூலமாய்த் தலைவியைக் கண்டு காதலிக்கின்றான். இக் காதல் பரிணமித்து இன்ப முடிவெய்துவதும் சுந்தர முனிவரைப் பிரேரித்துவரும் இறைவனது திருவுளப் பாங்கினாலேயாம். எல்லாம் இறைவனருளால் இன்பமாய் முடிகிறது. 'எல்லாம் அவனருளல்லாதில்லை' எனவும், 'அருளால் அனைத்தும் முடிவது' எனவும் கருணாகரர் கூறுவதுதான் இந்நாடகத்தின் உயிர் நிலை. இவ்வகை நாடகத்தை அதீத-இன்பியல் நாடகம் (Romantic Comedy) என்பர். இவ்வாறுள்ள மனோன்மணீயக் கதைப் பொருள் - கவிதை நாடகமாகவே அமைய வேண்டுதலும் தக்கதாதல் காணலாம். செய்யுட் கருவியும் நாடகப் பொருளும் நன்கு பொருந்தத் தேர்ந்துகொண்டது நமது ஆசிரியரின் மதிநுட்பத்தை விளக்குகிறது.

மேல் விவரித்த கனவுக் காதலுக்குப் பரபக்கமாக ஒரு நனவுக் காதற் கதையை ஆசிரியர் சிருஷ்டித்துள்ளார். இந் நனவுக் காதலின் நாயகி வாணி என்பவள். இவள் மனோன்மணியின் தோழி. தற்காலப் பெண்மைத் தத்துவம் இவளிடத்தே நிரம்பியுள்ளது. எதனையும் சுய - அறிவு கொண்டு மதிப்பிடும் திறமை

படைத்தவள்; கல்வியறிவும் மிகுதியாயுள்ளவள். அநாவசியமான நாணத்தை மேற்கொண்டு உண்மையை மறைப்பவளல்லள்; கள்ளங் கபடற்ற உள்ளத்தவள்; மனம், மொழி மெய்களில் தூய்மையானவள்; போலித் தன்மை சிறிதும் இல்லாதவள். கல்வி கற்றுப் பட்டம் பெற்றுக் கன்னியர்களாயிருக்கும் தமது புத்திரிகளின் ஒழுக்கத்தைப் பேணுது, அவரது கற்பை விலைக்கு விற்று வயிறு வளர்க்கும் தாயர் ஒரு சிலர் இன்றும் வாழ்கின்ற தற்காலவுலகிலே, பெண்மையின் சிறப்பு இவ்வாணியின் பரிசுத்த சரித்திரத்தால் எவ்வளவாக மேம்பட்டு விளங்குகின்றது. இவள் தற்கால மகளிர்க்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குபவள். தன் கொள்கையை அரசன் திருமுன்பும் வாதம் புரிந்து நிலை நிறுத்தும் துணிவுடையவள். இந்த அம்சத்தில் கண்ணகியை ஒத்து விளங்குகின்றுள். காதலொன்றே திருமண நிச்சயத்தில் கருத வேண்டுவது என்ற கடைப்பிடி கொண்டவள். இவளது காதற்குரியவன் நடராஜன்; இவன் கல்வியிலும் இயற்கைத் தத்துவ விசாரணையிலும் சிறந்தவன்; இயற்கையழகில் பெரிதும் ஈடுபட்டவன்; இவற்றிற்கு ஏற்ப, பேரழகுடையவன்; சுந்தர முனிவரால் நன்கு மதிக்கப்பட்டவன்.

காதல் - நெறியில் கனத்த இடையூறு உண்டல்லவா? இருவகைக் காதலுக்கும் இடையூறுகள் நேர்ந்தன. கனவுக் காதலுக்கு இடையூருக, ஜீவக வழுதியின் மந்திரியாகிய குடிலன் தலைப்பட்டான். சுயநலமே உருக்கொண்டவனுகிய இவன் ராஜ்ய காம்க்ஷையால் உந்தப்பட்டுச் சூழ்ச்சி செய்கின்றுன். மனேன்மணியைத் தூர்த்தனுகிய தன் மகன் பலதேவனுக்கு உரிமையாக்க முயல்கின்றுன்; ஜீவக வழுதியைக் குலத்தோடு அழித்துவிடப் படை திரட்டுகின்றுன்; உள்நாட்டுக் கலகத்தை மூட்டுகிறுன். வலிமை மிக்க அயல்நாட்டுச் சேர அரசனது பகையை வேண்டுமென்றே கூவியழைக்கின்றுன். முடிவின் தன் வினை தன்னைச் சுடும் என்பதற்கேற்ப, தானே தனது சூழ்ச்சி வலையில் அகப்பட்டு மாய்கின்றுன். நனவுக் காதலுக்கு இடையூறு விளைத்தவன் வாணியின் தந்தையாகிய சகடப் பிரபு. இவன் அரசு மெச்சும் செல்வத்தில் வாழ்ந்தபோதிலும் பொருளாசை இவனை விடவில்லை. 'ஆசைக்கோரளவுண்டோ' என்றுர். ஒரு பெரியார். தனது மகள் பலதேவனை மணந்தால் தனது மருகனுக்கு மந்திரி பதவி கிடைக்குமல்லவா? இந்த ஆசையால் வாணியைத் தன் கருத்துப்படி மணவினைக்கு உடன்பட வேண்டுமென்று அவளைச் சகடன் வற்புறுத்துகின்றுன். வாணியின் மனத்தைச் சிறிதும் மாற்ற முடியவில்லை. குடிலனது சூழ்ச்சி வெற்றியெய்தும் தறுவாயில், பலதேவனுக்கு மனேன்மணி மாலை சூட்டும் சமயத்தில், குடிலனது அதிசூழ்ச்சியால் கனவு கண்ட காதலர்கள் இருவரும் ஒருவரையொருவர் சந்திக்க நேர்ந்தது. மனேன்மணியின் கையில் மணமாலை புருஷோத்தமன் மார்பினை அலங்கரித்தது. சூழ்ச்சி யொழிந்தது. பிற எல்லாம் முடிய வேண்டும் நெறியில் முடிந்தன.

இதுவே கதைச் சுருக்கம். ஆனல், இக்கதை நிகழ்ச்சி நாடகத்தில் மிக்க திறமையோடு அமைக்கப்பட்டுள்ளது. கதா பாத்திரங்கள் சிறப்பியல்புகள் புலப்பட நன்கு சிருஷ்டிக்கப்பட்டுள்ளன. பாத்திரங்களின் இயல்பிற்கேற்ப, சம்பாஷணைகளும் நிகழ்ச்சிகளும் விளங்குகின்றன. தனிமொழிகளும் உரையாடல்களும் நமது மனத்தை அள்ளுகின்றன. குடிலனை மறக்க முடியாது. வாணி அனைவரது பாராட்டுக்கும் உரியவளாய்த் திகழ்கின்றுள். தங்கள் நாட்டின் மீது படையெடுத்துவந்த புருஷோத்தமன் தனது பாசறை

# கொத்துமல்லி

வை. கோ.

சென்னைக்குப் புதிதாக வருபவர்கள் காலையில் எழுந்தவுடன் புரியாமல் விழிப்பார்கள். இந்தக் கூடைக்காரர்களின் கூப்பாடுதான் அதற்குக் காரணம். அதிலே ஒரு கூப்பாடுதான் 'கறிபிலி ஏ கொத்மிலிஇ. இது என்னடா 'கறிபிலி ஏ கொத்மிலிஇஇ' என்று தோன்றும். அதுதான் கறிவேப்பிலை, கொத்துமல்லி விற்பவர்களின் கூப்பாடு. சென்னை நகரில் காலையிலே எந்தத் திக்கிலும் இந்தக் கூப்பாட்டைக் கேட்கலாம். சென்னையில் வசிக்கும் பெரும்பாலானவர்கள் கொத்துமல்லி கறிவேப்பிலை வாங்குகிறார்கள் என்பது இதனால் விளங்குகிறது.

வாங்குகிறவர்கள் அத்தனை பேருக்கும் கறிவேப்பிலை கொத்து

முட்டைக்கோஸைக் காட்டிலும் கொத்துமல்லியில் சத்து கூட இருக்கிறது என்று சொன்னால் ஆச்சரியப்படுவீர்கள் அல்லவா. ஆனால் உண்மை இது தான். சதாரணமாகக் கிடைக்கும் கொதுமல்லியில் இருக்கின்ற சத்துப் பொருளைக் கேட்டால் நீங்கள் அதிசயப்படு வீர்கள்.

---

யில் காதல் காரணத்தால் துயிலின்றிப் புலம்புகின்றான். இங்ஙனமே காதல் வசப்பட்ட மனோன்மணியும் வாணியும் துயிலின்றி இரவினைக் கழிக்கின்றார்கள். அப்பொழுது 'சிவகாமி சரிதம்' என்ற கதைச் செய்யுளை வாணி பாடுகின்றாள். அதன் இனிய சுவையும் சோகரஸமும் கருங்கல் மனத்தையும் கரைவிக்கும் இயல்புடையன. இங்ஙனமே பலதேவனை மாலை சூட்ட, பாவை போல உணர்விழந்து மனோன்மணி எழுந்தபோது வாணி பாடிய பிரார்த்தனைச் செய்யுட்கள் சோகம் நிரம்ப நம் இதயத்தில் உதிரம் கொட்டும்படி செய்கின்றன. பல இடங்களிலும் கவிதை நயம் சிறந்து விளங்குகிறது. இந்த அழகிய நாடகத்தில் விதூஷகன் மாத்திரம் செவ்வையாய் அமையவில்லை. இக்குறையும் நமது ஆசிரியரது ஓர் இயல்பினை நமக்குப் புலப்படுத்துகிறது. தத்துவ வுணர்ச்சியும் ஆத்ம விசாரணையும் நிரம்பிய உள்ளத்திலே நகைச்சுவை தோன்றுதல் அரிது.

இங்ஙனம் பல்வகையினும் சிறந்த நாடகம் இயற்றுதல் எளிதன்று. அதனை இயற்றுதற்கு வேண்டும் ஆற்றல் ஒரு சிலர்க்கே உள்ளது. இலக்கிய வுலகில் மேதைகளாயுள்ளாரெல்லாம் நாடகம் இயற்றுதலில் சிறந்தவர்கள். உதாரணமாக இங்கிலாந்தில் ஷேக்ஸ்பியர், பெர்னார்ட்ஷா; பிரான்ஸில் மோலியர்; ரஸீன்; ஸ்கான்டிநேவியாவில் இப்ஸென்; ஜெர்மனியில் கெயித்தே; நமது பாரத தேசத்தில் காளிதாஸன் இவர்களோடு ஒத்த தகுதியுடையவர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை என்றால், அது மிகைபடக் கூறல் எனச் சிலர் கருதலாம். ஆனால், இவர்களது இனத்தைச் சார்ந்து இறுதி வரிசையில் இடம் பெற்ற மேதைகளிலொருவர் நமது ஆசிரியர் என்று ஐயமறக் கூறலாம். விண்ணில் ஒளிரும் நட்சத்திரங்களெல்லாம் ஒரு தன்மையனவா? இல்லை. அவற்றைத் தரம்வாரியாகப் பிரித்து வான நூலாசிரியர்கள் வரிசைப்படுத்துகிறார்கள். அவற்றில் கடைசித் தரத்தைச் சார்ந்ததும் நட்சத்திரம் தானே? ★

மல்லியில் அப்ராமாகச் சத்துப் பொருள்கள் இருக்கின்றன என்பதை அறிந்தா வாங்குகிறார்கள்? அதுதான் இல்லை. கொத்துமல்லி கறிவேப்பிலையை அவர்களின் முன்னோர்கள் உபயோகித்தார்கள். அது மட்டுமல்லாமல் சாம்பார், ரசம், பச்சடிகளில் கொத்தமல்லியைப் போட்டால் வாசனை கமகமவென்று இருக்கும். காரணம் இதுதான். முன்னோர்கள் கொத்துமல்லி, கறிவேப்பிலையை வாசனைக்காக மட்டும் சாப்பிடவில்லை. உடல் நலத்தைக் காப்பாற்றுகிறது கொத்துமல்லி கறிவேப்பிலை என்பதை அறிந்து தான் சாப்பிட்டார்கள்.

### அகத்தியர் குணபாடம்

'கொத்துமல்லிக் கீரை உண்ணில் கோர அரோசகம்போம், பித்தமெல்லாம் வேருடனே பேரும் காண் — சத்துவமாம், வெச்சனவே போகம் விளையும் சுரம் தீரும், கச்சு மூலமாதே நீ காண்' என்று அகத்தியர் குணபாடம் கூறுகிறது.

கொத்துமல்லி இலையைச் சாப்பிடுவதனால் வாத அரோசகம், பித்த வருக்கம், பித்தசுரம் இவைபோம். வன்மையும் சுக்கில விருத்தியும் உண்டாகும்.

கொத்துமல்லியை தெலுங்கில் கொத்திமிரி என்றும், மலையாளத்தில் கொத்தமரி என்றும், ஹிந்தியில் தனியா என்றும் சொல்லப்படுகிறது.

நம் நாட்டு வழக்கப்படி சொன்னால் என்ன சார், "பழைய கதை" என்பீர்கள். சாஸ்திர முறைப்படியும் கொத்துமல்லியைப் பற்றிச் சொல்லுகிறேன்.

கொத்துமல்லியில் வைட்டமின் 'ஏ' 12630 யூனிட்டுகள் இருக்கின்றன. வைட்டமின் 'பி–2' நிறைய இருக்கிறது. 'சி' வைட்டமின் 135·2 இருக்கிறது. இரும்புச் சத்து 9·97 இருக்கிறது.— புரோட்டீன், தாதுப் பொருள், கொழுப்பு சத்து, கார்போஹைடிரேட் கறிவேப்பிலையைக் காட்டிலும் கொத்துமல்லியில் குறைவு. கறிவேப்பிலையைப் போல கொத்துமல்லியில் இரும்பு சத்து மூன்று மடங்கு இருக்கிறது. 'சி'வைட்டமின் கறிவேப்பிலையில் 4·2 இருக்கிறது. முட்டைக்கோஸைக் காட்டிலும் கொத்துமல்லியில் 15 மடங்கு இரும்பு சத்து இருக்கிறது. முட்டைக் கோஸில் 'ஏ' வைட்டமின் 2000-ம் தான் இருக்கிறது.—எல்லா வகையிலும் முட்டைக்கோஸைக் காட்டிலும் சத்து நிறைந்த கீரை கொத்துமல்லி.

### தனியா சத்து

தனியா என்று சொல்கிறோமே கொத்துமல்லி விதையை, அதைப் பற்றிச் சிறிது சொல்லி கொத்துமல்லி மகாத்மியத்தை முடிக்கிறேன்.

கொத்துமல்லி விதையில் புரோட்டீன் 14·08. இரும்பு சத்து 17.94. வைட்டமின் 'ஏ' 1570 யூனிட்டுகள் கால்சியம், கார்போஹைடிரேட் பாஸ்பரஸ், தாதுப்பொருள் இந்த சத்துகளும் போதிய அளவு இருக்கின்றன.

சாம்பார், அல்லது ரசப்பொடியில் பாதி மிளகாயும், பாதி கொத்துமல்லி விதையும் சேர்ப்பதும் உண்டு. சிலர் மிளகாய் ஒரு பகுதி. கொத்துமல்லி இரண்டு பகுதியும் சேர்ப்பதும் உண்டு. எதற்காகத் தெரியுமா? மிளகாயில் உள்ள விஷச் சத்தை முறிப்பதற்காகத்தான் கொத்துமல்லி விதையைச் சேர்க்கிறார்கள்.

கொத்துமல்லி விதை சாப்பிடுவதனால் உள்சூடு, நளிர்ச்சுரம், பயித்திய ரோகம், அசீரணம், வாந்தி, விக்கல், க்ஷீன சுக்கிலம், பெரும் ஏப்பம் இவை போம்.

விதையை வறுத்து வாயில் விட்டு மென்றால் வாய் நாற்றம் போகும். ★

"உண்டால் அம்ம, இவ்வுலகம்" என்று தொடங்கும் புற நானூற்றுப் பாடலின் பல்வேறு அடிகளிலுள்ள கருத்துக்களைத் தந்து வானொலி நிலையத்தார் கவியரங்கம் நடத்தினார்கள். அந்த அரங்கில் 'துஞ்சலும் இலர்' என்ற கருத்தைக் கொண்டு, கவிராயர் அரங்கேற்றிய பாடல் இது.

# "துஞ்சலும் இலர்..."

"திருச்சிற்றம்பலக் கவிராயர்"

1

புறத்தின் ஒரு பாடல்
பொருளை, தமிழ்க் குலத்தின்
மறத்தை எடுத்துரைக்க
வரவழைத்த வானொலியே!

வானொலியின் முன்னிலையில்
வாக்குரைக்க வந்த கவி
வாணர் திருக்குழுவே!
வாணர் திருக்குழுவின்
வாசகத்தைக் கேட்பதற்காய்
வந்த அவைத் தலைவ!

காற்று கொணர்ந்துதரும்
கவியை நும்செவிவாய்
ஏற்றுக் களிக்கின்ற
எந்தமிழ்நன் னாட்டோரே!

உமக்கெல்லாம்
வணக்கம்; வணக்கம். இதோ
சுணக்கமின்றி என்கவியைச்
சொல்லத் தொடங்குகிறேன்.

2

உலகம் நிலைத்திருக்கும்
உண்மையினைப் பண்டொருநாள்
அலைவாயில் மாண்டொழிந்த
அறிஞன் பெருவழுதி
கலைவடிவால் கவியுருவால்
காட்டிவிட்டுப் போயினன் காண்.
கலைவடிவாய்க் காட்டியதோர்
கவியின் திருக்கருத்தின்
நிலை என்ன?...
ஒரு நிமிஷம்
நினைவூட்டிப் பார்த்திடலாம்...

3

அஞ்சுவதற் கஞ்சுவது
அறிவுடைமை என்றுரைத்த
அஞ்சொற் கவிவாக்கும்
அறிவோம் யாம்;...
... என்றாலும்
நெஞ்சிற் பல கவலை
நித்த நித் தம்பெருக்க
அஞ்சி உயிர் சுமத்தல்
அறிவுடைமை ஆகிடுமோ?
துஞ்சி மடிந் திருத்தல்
துணிவுடைமை ஆகிடுமோ?
பஞ்சையராய், பாமரராய்,
பயத்தின் அடிமைகளாய்,
கிஞ்சித்தும் வீரமிலாக்
கீழாம் பிறவிகளாய்,
செஞ்சொல் தமிழ்க் குலத்தோர்
சீரழிய லாகிடுமோ?
கப்பிக் கவிந்து வரும்
கவலையினை, நெஞ்சகத்தை
அப்பிக் கிடந்தலைக்கும்
அச்சத்தை, மன்னுலகைக்
குப்பைக் குழியாக்கும்
கூனச் சிறுமையினைப்
போக்காதிருந்து நிதம்
புலம்புவதும், நாளெல்லாம்
சாக்காட்டுப் பாதையிலே
சாடுவதும் நலம் ஆமோ?

4

"இல்லை இல்லை இல்லை" என்றான்
எங்கள் பெரு வழுதி!
தொல்லை தரும் துயரைத்

துடைக்க, மன்குலத்தின்
எல்லையிலாப் பேதைமையின்
இருளைப் பிளந்தெறிய,
சொல்லில், கிரியைகளில்
தூய வொளிக் கதிர்விரிய,
நல்லுரிமைப் போரில்
நமனேடும் போட்டியிடத்
துணியும் பெருவீரத்
தோன்றல் சிலருண்டு,
அவரால் தான்—
இனியும் இந்நாளும்
இவ்வுலகு நிலைத்திருக்கும்
என்றுதான் சொன்னன்
எங்கள் பெருவழுதி!

## 5

பெருவழுதி சொல்லிவைத்த
பேருரையை இனிதேற்று
அறிந்துணர முனைந்தாலோ? ...
அய்யய்யோ!...
... இன்று நமைத்
தின்று அரித்து வரும்
தீமைகளும், சிந்தைதனைக்
கொன்று குலைத்து வரும்
கோணல் சிறுமதியும்
எண்ணில் அடங்கிடுமோ?
எத்தனையோ?...
...எத்தனையோ?

## 6

சாதி சமய மெனும்
சழக்கால் மனப் பூசல் ;
ஆதிப் பழமை யெனும்
அறியாமை ; அறிவிழந்த
கண்மூடிப் பழக்கங்கள் ;
காரிருட்டு வாழ்க்கையிலே
மண்மூடிப் போகின்ற
மானிடங்கள்; வாழ்க்கையெனும்
போரில் தலைநிமிர்ந்து
போராடும் தெம்பிழந்து
நீரிற் குமிழியென
நெஞ்சுடையும் பஞ்சையுளம்;
மிடிமையெனும் சாகரத்தே
மிதந்தலையும் தெப்பமென
அடிமைச் சிறு வாழ்வில்
அலைக் கழியும் மன்னுயிர்கள் ; ...
இவ்வாருய் —
எண்ணில் பல வின்னல்
இருளிற் கிடப்போரின்
கண்ணைத் திறந்து, வழி
காட்டி, முன்நடந்து.
பண்ணரிய நற்பணிகள்
பலவும் புரிந்து, உலகோர்
வாழ்வை வளம் படுத்தி,
மானுடத்தின் புல்லடிமைத்
தாழ்வைத் தகர்த்தெறிந்து,
தாரணிவாழ் மானிடர்கள்
பீடு நடை நடக்கும்
பெற்றிக்காய், தம்முயிரை.
ஈடுவைத்துப் போராடும்
இதயத்தோர் இவ்வுலகில்
இருந்தால், இருப்பதனல்,
உலகம் நிலைத்திருக்கும்
உலையா திருந்துவரும்;
திலகமென அவர்திருப்பேர்
தினமும் நிலைத்திருக்கும்.

இவ்விதமாய்—

இலகுபுகழ் சுமந்து
எந்நாளும் இறவாத
உலகப் பெரியார்கள்
ஒரு சிலரோ?...
...பலர் உண்டு!

## 7

வெளி நாட்டார் நம் நாட்டை
வேட்டைக் களமாக்கி
களியாட்டம் ஆடிநின்ற
காலத்தே,
அன்னவரை
வால்பிடித்து, முகஸ்துதியாய்
வக்கணைகள் பேசி, அவர்
கால்பிடித்து, தம்முயிரைக்
கருப்பட்டி யாய்ப்பேணி
பாரதத்து மன்னரினம்
பவிசிழந்த நாளையிலே...
அன்னியரை
நேரெதிர்த்து, பரித்தியாக
நெருப்பில் குதித்து, அவர்மேல்
போரெதிர்ந்து, வீரம்
புரிந்தே உயிர்நீத்த
திரன்கட்ட பொம்மன்
திறலை நாம் அறியோமா?

* * *

மரணத்தின் சந்நிதியில்
மானத்தைக் காப்பதற்காய்
திரணமென உயிர்கொடுத்து
தேசக்கொடி காத்த
திருப்பூர்க் குமரன் எனும்
சீராளன் தன் திறலும்
தெரியாதோ, நமக்கெல்லாம் ?

* * *

தடிப்பேறி மரத்திருந்த
தமிழர் உளந்தனிலே
துடிப்பேற, தேசபக்தி
துள்ளிப் பொறிபறக்க,
விதேசியரின் கொள்ளை
வியாபாரத்துக் கெதிராகச்
சுதேசித் தனிக்கப்பல்
தோற்றுவித்த தேசபக்தன்
சிதம்பரனார் தம்வீரச்
செயலும் நாம் அறியோமா ?

* * *

வீட்டில் உலையேற்றும்,
விளக்கேற்றும் செலவுக்காய்,
வேட்டி துணிமணிக்காய்
மேற்செலவுச் சில்லரைக்காய்
பாட்டை, பைந்தமிழைப்
பணயம் வைத்து, தம்முயிரை
ஊட்டி வளர்த்து வந்த
கவிஞர் ஒரு சிலபேர்
நாட்டை மறந்து, மக்கள்
நலத்தைத் துறந்துவிட்டு,
சீட்டுக் கவிபாடிச்
செய்யுள் புலமையினால்

தமிழை அலைக்கழித்துத்
தட்டழிந்த காலத்தே,
அமிழ்தம் அனைய தமிழ்
அன்னை விலங்கறுக்கத்
தோன்றி, தமிழுலகின்
தோளுயரச் செய்யவந்த
தோன்றல் இவன் என்ன,

மிடிமைப் பேய்க்கணங்கள்
மிரட்டுகின்ற வேளையிலும்
அடிமைத் தளையறுக்கும்
ஆவேசக் கனல் என்ன,

நல்ல தமிழ்க் கவியால்
நாட்டை உயிர்ப்பித்து,
புல்லடிமை தன்னைப்
போக்கும் வலியளித்த
சொல்லின் திருக்குமரன்
சுப்ரமண்ய பாரதியை
எல்லோரும் அறியோமோ ?

அறிவோம் ; நன்கறிவோம்.
அவரெல்லாம் நம்முளத்தே
உரியதொரு இடம் பெற்ற
உண்மையினை யும்அறிவோம் !

**8**

இன்னபலர்—
தன்னலத்தைக் கருதாது
தாய் நாட்டின் நலம்கருதி,
பன்னரிய தியாகங்கள்
பலபுரிந்தார் ; அதனால்தான்
இன்னுமிந்த மன்னுலகு
இருக்கும் உண்மையினை,
மன்னுலகு வாழ்ந்துவரும்
மருமத்தை, மாட்சிமையை
உன்னி உணர்ந்தோம்நாம்.

உணர்ந்தே நாம்—

அன்னவரின் நற்பணியை,
அன்னவர்தம் லட்சியத்தை,
தன்னலத்தைக் கருதாத
தகைமையினை, வீரத்தை,
இந்நாளும் நாம்போற்றி
இதயத்தே ஏற்போமேல்,
அஞ்சுவதே தொழிலாய்
அமையாமல், அச்சத்தால்
துஞ்சி மடியாமல்
துயர்வாழ்வு வாழாமல்

என்றென்றும் புகழோடும்
என்றென்றும் அருளோடும்
என்றென்றும் நிலைபெற்று
இருந்திடலாம் நாமெல்லாம்
என்றே உரைபுகன்று
என்கவியை முடிக்கின்றேன் ;
மன்றோரே ! நுமக்கெல்லாம்
வணக்கம் ; மறுவணக்கம் !



# எருக்கு

**'டாக்டர்'**

கால்களில் கல் அழுந்தி நடக்க முடியாமல் தவிக்கும்போது இருபது எருக்கிலை அடுக்கி அடுப்பில் நன்ருகக் காய்ந்த செங்கல்லின்மேல் வைத்து வலிக்கும் பாகத்தை இலைகளில் பொருத்தி ஒவ்வொன்ருக எடுத்து வந்தால் உடனே குணமாகி விடும்.

கீழ் வாயுவுக்கு எருக்கன் பூவை ஆமணக்கெண்ணெயில் வதக்கி ஒத்தடம் கொடுத்துக் கட்டினல் நீங்கும். ஆசன மூலத்திறகு, இலையின் பசுமையான பாகத்தில் ஆமணக்கெண்ணெய் தடவி, அணலில் காட்டி பொறுக்க முடியுமான சூட்டில் போட வேதனை நீங்கும்.

நெறி கட்டிக்கொண்டு அதிக உபாதையாயிருந்தால், இலைகளை நறுக்கிக் கொண்டு, பிரஷ்போலச் சுருட்டி சூடான எண்ணெயில் தோய்த்து எண்ணெயை வடித்து விட்டு, ஒத்தடம் கொடுக்கலாம். பூட்டுகளில் சகிக்க முடியாத நோயும் வீக்கமும் இருந்தால், அதற்கும் இதே சிகிச்சை செய்யலாம்.

காது வலிக்கும், காதில் சீழ் வடிவதற்கும், எருக்கன் பழுப்பை அணலில் காட்டி கசக்கி ரசத்தைக் காதில் பிழியலாம்.

எருக்கன் பாலுடன் சமபாகம் ஆமணக்கெண்ணெய் கலந்து மஞ்சள் பொடி சேர்த்துச் சிரங்குகளுக்குப்போட, எப்படிப்பட்ட சிரங்குகளும் ஒரே தடவையில் உதிர்ந்து விடும். அரை மணி நேரம் கழித்து இலுப்பைப் புண்ணுக்குப் பொடியாலோ பச்சைப் பயிறு மாவாலோ வது தேய்த்துக் குளிர்ந்த ஜலத்தில் கழுவிவிடலாம்.

இலைகளை ஒடித்ததும் வடியும் பாலில் உப்புச் சேர்த்து காயங்களுக்கும், சுளுக்குகளுக்கும், பல் வலிக்கும், கட்டிகளுக்கும் போடலாம்.

தேள்கடிக்கு எருக்கன் பாலும், அரைத்த எருக்கிலையும் கைகண்ட ஒளஷதங்கள்.

மண்டையில் உண்டாகும் சண்டித்தனம் செய்யும் காரகப் படைக்கு எருக்கன் பால் திவ்ய ஒளஷதம். ஆனல் எருக்கன் பாலுக்கு மயிர் போக்கும் குணமுண்டு. ஜாக்கிரதையாக உபயோகிக்க வேண்டும். இல்லாவிட்டால் வழுக்கை விழுந்து விடும்.

யானைக் காலுக்கு எருக்கன் வேரை அரிசி கழுவிய நீரில் அரைத்துப் பத்துப் போடலாம்.

ஆஸ்துமாவுக்கு வெள்ளெருக்கன் பூ லேகியம் செய்து, சித்த வைத்தியர்கள் கொடுக்கிருர்கள். முகத்தில் உண்டாகும் கருப்பான வடுக்களை மாற்ற எருக்கன் பாலோடு மஞ்சள் பொடியைக் கலந்து போடுவதும் உண்டு.

மூக்கிலும் தொண்டையிலும் வீக்கம் கண்டு மூச்சடைத்து உயிருக்கே ஆபத்து நேரும்போது எருக்கன் பூவை நாசியருகில் வைத்து விரலால் தட்டி மகரந்தப் பொடி நாசிக்குள் போகும்படி செய்து உடனே குணமுண்டாக்கி யிருக்கிருர்கள் சில தன்வந்திரிகள்.

குழந்தைகளின் ஈரல் குலைக் கட்டிகளுக்கு எருக்கிலையை மண் சீலையால் வாய் கட்டப்பட்ட சட்டியில் சாம்பலாக்கி இந்துப்புடன் சேர்த்துக் கொடுப்பதுண்டு. இந்த பஸ்பத்தை வயிற்றுப் பூச்சிகளுக்கும் சீதபேதிகளுக்கும்கூடக்கொடுப்பதுண்டு.

திப்பிலியை எருக்கன் பாலில் ஊறவைத்துப் பொடித்து மூச்சுவிட முடியாமல் தவிக்கும் ஆஸ்துமா வியாதியஸ்தர்களுக்குக் கொடுத்தால் உடனே குணமுண்டாகும். வெள்ளெருக்கன், சிவப்பு எருக்கைவிட சிலாக்கியம். ★




*கர்ண பரம்பரையாகத் தமிழ் நாட்டில் வழங்கிவரும் சில நீதிக் கதைகளை இங்கே* **ஸ்ரீ. வி. ரோஹிணி** *சொல்லுகிறார்.*

## கதைக் கடல்

நரேந்திரன் என்ற ஒரு அரசன் வாழ்ந்து வந்தான். அவன் தன்னிடம் வரும் புலவர்களையெல்லாம் பழித்து அனுப்புவான். புலவர்களை நோக்கி 'உங்களுக்குக் கதைகள் தெரியுமா?' என்று கேட்பான். புலவர்களும் தங்களுக்குத் தெரிந்த கதைகளையெல்லாம் சொல்லுவார்கள். அவர்கள் சொல்லும் கதைகளைக் கேட்ட பின்னர் 'மேற்கொண்டு வேறு கதைகள் தெரியாதா?' என்று அவர்களைக் கேட்டு அவர்களைப் பழித்து அனுப்பிவிடுவான்.

இந்த அரசனுக்குப் புத்தி புகட்ட வேண்டுமென்று ஒரு புலவன் முடிவு செய்தான். அரசனிடம் ஒரு நாள் அவன் வந்தான். அரசன் அவன் பெயர் என்ன என்று கேட்டான். புலவன் தன் பெயர் கதைக் கடல் என்று கூறினான்.

அரசன் புலவனை நோக்கி, 'ஓய் கதைக் கடலே! உமக்கு எத்தனை கதைகள் தெரியும்?' என்று கேட்டான்.

இதைக் கேட்ட புலவன் 'அரசே! என் பெயரே இந்தக் கேள்விக்கு பதில் சொல்லும். எனக்குத் தெரிந்த கதைகளுக்கு அளவே இல்லை. அதன் காரணமாகத்தான் எனக்குக் கதைக் கடல் என்று பட்டப் பெயர் கிடைத்திருக்கிறது' என்று பதில் கொடுத்தான்.

அரசன்: 'ஓ! அப்படியா? எங்கே ஒரு கதை சொல்லும் பார்க்கலாம்'
புலவர்: 'அரசே! நாலாயிரம் யோசனை அகலமும், ஆறாயிரம் யோசனை நீளமுமுள்ள ஒரு தடாகத்தில் எங்கும் நீக்கமற நெருங்கித் தாமரைகள் மலர்ந்திருந்தன. தடாகத்தைப் பார்த்தால் ஒரே மலராகக் காட்சியளித்து இது ஒரு மலர் மெத்தையோ என்று சந்தேகிக்கத் தக்கதாக இருந்தது. ஒருநாள் இந்தத் தடாகத்தில் கோடிக் கணக்கான அன்னப் பறவைகள் வந்து இறங்கின. அன்னங்கள் என்றால் சாதாரணமான அன்னங்கள் அல்ல. பொற்சிறகு அன்னங்கள் அவை. அந்த நேரத்தில் காற்றும் மழையும் கலந்தடித்தன. அன்னப் பறவைகள் சொல்லொணாத் துயரத்தில் ஆழ்ந்தன. அந்தத் தடாகத்தின் அருகில் ஒரு மலைக்குகை இருந்தது. இந்த மலைக்குகையை நோக்கி அன்னங்கள் பறந்து தஞ்சம் புக ஆரம்பித்தன.'

அரசன்: "அப்புறம் என்ன?"

புலவர்: "அவைகளில் ஒரு பறவை புறப்பட்டது."

அரசன்: "அப்புறம்!"

புலவர், ,,இன்னொரு பறவைபுறப் பட்டது."

இப்படியாக அரசன் கேட்கும்போதெல்லாம் 'இன்னொரு பறவை புறப்பட்டது' என்றே சொல்லிக்கொண்டு வந்தார் புலவர். அரசனுக்கு அப்பொழுதுதான் புத்தி வந்தது. இந்தப் புலவனை வெல்ல முடியாது என்று கண்டு அவரை நன்கு மரியாதை செய்து அனுப்பினான்.

## ஏமாந்த பிராமணன்

ஒரு ஊரில் ஒரு பிராமணன் இருந்தான். அவன் ஒரு ஏழை. அவனுக்கு உளுந்து வடை தின்ன வேண்டுமென்று கொள்ளை ஆசை. எங்கெங்கோ பிச்சையெடுத்து கொஞ்சம் உளுந்து, எண்ணெய், வேண்டிய சாமான்களை எல்லாம் சம்பாதித்து அவன் மனைவியிடம் கொடுத்து 'நூறு வடையாவது சுட்டுத்தா' என்று கேட்டான்.

அவனது மனைவியும் வடை சுட ஆரம்பித்தாள். வடையைச் சுடும் போதே ஒவ்வொரு வடையாக அவள் தின்று கொண்டேயிருந்தாள். கடைசியில் ஒரே ஒரு வடை தான் மிஞ்சியது. அதை அவள் கணவனிடம் கொடுத்தாள். அவன் 'மீதி தொண்ணூற்றென்பது வடைகள் எங்கே? அதையும் கொண்டுவா' என்று கேட்டான். அதைக் கேட்ட மனைவி 'நான் சாப்பிட்டுவிட்டேன்' என்றாள். 'அடேயப்பா உன் வயிறு எப்படித்தான் இத்தனை வடையையும் கொண்டது! எப்படி அம்மா நீ இத்தனையையும் தின்றாய்?' என்று மனைவியை அந்தப் பிராமணன் கேட்டான்.

'அதுவா இப்படித்தான் சாப்பிட்டேன்' என்று கூறி மீதி இருந்த ஒரு வடையையும் பிட்டுச் சாப்பிட்டுக் காண்பித்தாள்.

## நம்பி மோசம் போனவன்

முன்னொரு காலத்தில் ஒரு மணியகாரன் இருந்தான். அவனுக்கு ஒரே குழந்தை. அந்தக் குழந்தையை மிகவும் செல்லமாக வளர்த்து வந்தான். மணியகாரன் ஒருநாள் தனது தலையாரியைக் கூப்பிட்டு 'அடே தலையாரி! நம்ம குழந்தைக்கு பச்சரிசி மேல் ரொம்ப ஆசையாக இருக்கிறதாம். நீ வயலுக்குப் போய் நன்கு முற்றிய மணியான கதிராகப் பார்த்து இரண்டு படி நெல் கசக்கிக் கொண்டு வா போடா' என்று சொன்னான்.

தலையாரியும் 'ஆகட்டும் சாமி' என்று கூறி வயலுக்குச் சென்றான். இரண்டு படி நெல்லைக் கசக்கிக் கொண்டு வந்து கொடுத்தான். அன்றையிலிருந்து தலையாரியும் ஒவ்வொரு இரவும் வயலுக்குச் சென்று மூலைக்கொன்றாய் கதிர்களைப் பிடுங்கி இரண்டு படி, மூன்று படி என்று நெல்லை தன்னுடைய வீட்டுக்குக் எடுத்துச் சென்று கொண்டிருந்தான்.

இதே மாதிரி நீண்ட நாட்கள் செய்து வந்தான். அறுவடை காலம் வந்தது. மணியகாரன் வயலுக்கு அறுவடைக்காக ஆட்களை அனுப்பினான். தானும் சென்றான். வயலில் பல இடங்களில் கதிர்கள் காணமல் இருந்ததைக் கண்டான். இதைக் கண்ட மணியகாரன் தலையாரியைப் பார்த்து, 'நீ என்னடா காவல் காக்கிறாய்? எங்கே பார்த்தாலும் நெல் திருட்டுப் போயிருக்கிறதே!' என்று கேட்டான். தலையாரி வெகு ரகசியமாக மணியகாரனிடம் 'திருட்டு இல்லை சாமி. நீங்கள் தானே அன்றைக்கு நெல்லைப் பிசைந்துகொண்டு வரும்படி சொன்னீர்கள்' என்றான். மணியகாரன் வயல் முழுவதையும் சுற்றிப் பார்த்தான். பல இடங்களில் இதே மாதிரி இருக்கக் கண்டான். தலையாரியைக் கேட்டால் ஒவ்வொன்றுக்கும் 'தங்கள் உத்தரவுப்படிதான்' என்று கூறி வந்தான்.

சக்தி



இடம்பெற்றது: தமிழ்நாடு, வா. ரோகிணி

மார்ச் 54 —

மணியகாரன் ஒன்றுமே சொல்ல வில்லை. தன்னுடைய முட்டாள் தனத்துக்கு நொந்துகொண்டான்.

## கெட்டவனுக்குச் செய்த உபகாரம்

காட்டில் வேட்டையாடச் சென்ற ஒரு வேடனை ஒரு புலி துரத்தியது. வேடன் பயந்துபோய் ஒரு மரத்தின்மேல் ஏறிக்கொண்டான். அந்த மரத்தில் ஒரு குரங்கு குட்டிகளுடன் வசித்து வந்தது. புலி மரத்தின் அடியில் உட்கார்ந்து கொண்டு குரங்கைப் பார்த்து மனிதனைக் கீழே தள்ளிவிடும்படி கேட்டது. குரங்கு மறுத்துவிட்டது. புலி குரங்கை நோக்கி 'இந்த மனிதனுக்கு நீ உதவி செய்யாதே. இவன் ஒரு வேடன். நம்மையெல்லாம் கொல்லுகிறவன்' என்று கூறியது. இதைக் கேட்ட குரங்கு 'அது எப்படியோ போகட்டும். அவன் கெட்டவனுக இருந்தாலும் என்னிடம் தஞ்சம் என்று வந்தவனுக்கு அப்காரம் செய்ய மாட்டேன் போ' என்று கூறியது. புலி மரத்தின் அடியில் வேடன் வரட்டுமென்று காத்துக் கொண்டிருந்தது. மனிதனுக்கோ ஒரே பசி. குரங்கு இதைப் பார்த்து அவன் பசியை அடக்க எண்ணி பழங்கள் கொண்டு வரச் சென்றது. குரங்கு சென்றதும் வேடனைப் பார்த்து புலி குரங்கினுடைய குட்டியைக் கீழே தள்ளிவிடும்படியும், அப்படித் தள்ளிவிட்டால் அவனை ஒன்றும் செய்யாமல் போய் விடுவதாகவும் கூறியது. வேடன் அப்படியே குரங்குக் குட்டியைக் கீழே தள்ளிவிட்டான். புலி குரங்குக் குட்டியைப் பிடித்து வைத்துக் கொண்டும் அந்த இடத்தைவிட்டு நகரவில்லை. பழம் கொண்டுவரச் சென்ற குரங்கு திரும்பி வந்தவுடன் 'குரங்கே நீ மூளை கெட்டவன். நீ அவனுக்குப் போய் உபகாரம் செய்தாயே. அவன் என்ன செய்திருக்கிறன் பார்த்தாயா? உன் குட்டியைத் தள்ளி விட்டுவிட்டான். அவன் கெட்டவன். நீ பேசாமல் அவனைத் தள்ளிவிடு. உன் குட்டியை ஒன்றும் நான் செய்வதில்லை' என்றது.

இதைக் கேட்ட பிறகும் குரங்கு வேடனைத் தள்ளிவிட மறுத்து விட்டது.

குரங்கைப் பார்த்து புலி சொன்னது: 'நீ கெட்டவனுக்கு உபகாரம் செய்கிறாய். பாத்திரமறிந்து உபகாரம் செய்ய வேண்டும். உனக்கே நீ தீங்கை வரவழைத்துக் கொள்ளுகிறாய். நீ எப்படியாவது போ' என்று சொல்லிவிட்டு குட்டியையும் விட்டுவிட்டுச் சென்றது. வேடன் பழங்களைத் தின்றான். தனது குழந்தை குட்டிகளுக்கு உணவு ஒன்றும் இல்லையே என்று கவலைப்பட்டான். குரங்கு தூங்கட்டுமென்று காத்திருந்துவிட்டு அது தூங்கியதும் குரங்கைக் கொன்று எடுத்துச் சென்றான்.

## விடாக்கண்டன்

முன் ஒரு காலத்தில் ஒரு அரசன் இருந்தான். அவன் போடாத வரியே கிடையாது. வரி கொடுக்க முடியாமல் மக்கள் திண்டாடினர். அந்த ஊரில் ஒரு தோட்டக்காரன் இருந்தான். அவனுக்கு வரிகொடுக்க இயலவில்லை. அவன் நேரே அரசனிடம் சென்றான். அவன் அரசனைப் பார்த்துத் தன்னல் இவ்வளவு வரிகளையும் கொடுக்க இயலாதென்றும் ஆகவே சில வரிகளைத் தள்ளுபடி செய்ய வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டான். அரசன் மனம் இளக வில்லை.

அரசன் தோட்டக்காரனைப் பார்த்துச் சொன்னன்: "அதெல்லாம் முடியாது. நீ வரி எல்லாவற்றையும் கட்டித்தான் ஆகவேண்டும்"

தோட்டக்காரன்: "சாமி! என்னல் முடியாதே. என்னிடம் வசதி யில்லையே."

அரசன்: "அப்படியானால் என்னுடைய நாட்டில் இருக்காதே. எங்காவது தொலைந்து போ"

தோட்டக்காரன்: "நான் எங்கே போவேன்?"

அரசன்: "அது எனக்குத் தெரியாது. உன் மனத்திற்குப் பிடித்த இடத்திற்கு எங்காவது போ."

தோட்டக்காரன்: "நீங்களே சொல்லுங்கள். எனக்குப் பிடித்திருந்தால் அங்கே போகிறேன்."

அரசன்: "அப்படியானால் சிரங்கப் பட்டணத்துக்குப் போ."

தோட்டக்காரன்: "ஐயோ, நான் அங்கே போகமாட்டேன். அங்கே உங்கள் அண்ணன்தானே அரசன்."

அரசன்: "சரி தஞ்சாவூருக்குப் போ."

தோட்டக்காரன்: "அங்கேயும் போக மாட்டேன். அங்கே உங்கள் சித்தப்பா இருக்கிறார்."

அரசன்: "அப்போ நீ பேசாமல் பந்தருக்குப் போ."

தோட்டக்காரன்: "அங்கே உம்முடைய மைத்துனர் ஆட்சி செய்கிறாரே. அங்கேயும் என்னால் போக முடியாது."

அரசன் கூறிய ஒவ்வொரு இடத்திற்கும் இம்மாதிரியே அவன் பதில் கூறி வந்ததைக் கேட்டதும் அரசனுக்கு ஒரே கோபம். அவன் தோட்டக்காரனைப் பார்த்து "இங்கெல்லாம் உனக்குப் போக இஷ்டம் இல்லாவிட்டால் நீ நரகத்துக்காவது போய்த் தொலை" என்று சத்தமிட்டான்.

தோட்டக்காரனும் பதிலுக்கு உரக்க, "ஆண்டவனே! நான் அங்கேயும் போகமாட்டேன். அங்கே உம்முடைய இறந்துபோன தகப்பனார் இருக்கிறாரே! நான் எப்படி அங்கே போவேன்" என்றான்.

அரசன் வெட்கித் தனது அநியாய வரிகளை ரத்துச் செய்தான்.



## சமயோசித புத்தி

அதிகாலை. கடைத்தெருவில் ஒரு குடியானவப் பையன் தெருக்களில் சிந்திக் கிடந்த தானியங்களைப் பொறுக்கிக் கொண்டிருந்தான். அப்பொழுது தான் படுக்கையை விட்டு எழுந்த அந்த நகரின் அரசன் கடை வீதியை எட்டிப்பார்த்தான். அவன் கண்களில் முதலில் அந்தப் பையன் தான் தட்டுப்பட்டான். 'அட சனியன்' என்று கூறிக் கொண்டே உள்ளே சென்றான். அவசரத்தில் நிலையில் தலையை முட்டிக்கொண்டான். அரசனுக்குச் சொல்ல முடியாத கோபம்.

"அந்தப் பையனைக் கொண்டு போய் சிரச்சேதம் செய்யுங்கள். அவன் முகத்தில் விழித்த காரணத்தாலேயே என் தலையில் அடிபட்டது. ஒரு நாள் இவனைப் பார்த்ததற்கே இப்படி இருந்தால் தினசரி இவனைப் பார்க்கிறவர்களின் கதி என்ன ஆவது. அவனை விட்டுவைக்கக் கூடாது." என்று தனது வீரர்களுக்கு உத்திரவிட்டான் அரசன்.

வீரர்களும் பையனைப் பிடித்து இழுத்துச் சென்றார்கள். "அரசனிடம் ஒருவார்த்தை சொல்ல வேண்டும்; சொன்னபிறகு என்னைக்கொல்லுங்கள்" என்றான் பையன். அரசனிடம் அவன் கொண்டு செல்லப்பட்டான்.

அவன் அரசனை வணங்கிய பிறகு 'அரசே! என்னைப் பார்த்ததால்தான் உங்களுக்கு இந்த சங்கடம் ஏற்பட்டது; ஆகவே என் உயிரையை வாங்குவது நியாயம். ராஜ தரிசனம் நல்லது என்பார்கள் பெரியவர்கள்; நான் இன்றுதான் ராஜ தரிசனம் செய்தேன். அதன் பலன் என் தலை போகிறது. இதைக் கூறலாமென்றுதான் நான் வந்தேன் "என்று கூறினான்.

இதைக் கேட்ட அரசன்மிகுந்த வெட்கப் பட்டான். பையனின் புத்திசாலித் தனத்தை மேச்சினான். ★

# அல்லி ராணி

பியு-சங்-லிங்

வெகுகாலத்திற்கு முன்பு சியாயோ-சோ என்ற நகரில் அவ்ஹஸன் என்ற பெயருள்ள ஒருவன் வசித்து வந்தான். ஒருநாள் பகலில் தூங்கிக்கொண்டிருந்தபொழுது திடீரென்று அவன் பக்கத்தில் செய்தி கொண்டுவந்துள்ள தூதுவனைப் போன்று நல்லாடையணிந்த ஒருவன் நிற்பதைக் கண்டதும் திடுக்கிட்டுப்போய், "உன் எஜமானர் யார்?" என்று கேட்டான் அவ்.

அந்தத் தூதுவன் நேரிடையாகப் பதில் சொல்லவில்லை. மிக்க பணிவுடன் நீட்டி வளைத்துக்கொண்டு "அவர் வெகு தூரத்தில் இல்லை." என்றான்.

உடனே அவர்கள் இருவரும் புறப்படலாயினர். கொஞ்சதூரம் சென்றதும் எண்ணற்ற மாளிகைகள் ஒன்றைவிட ஒன்று உயர்ந்து அழகாக வானளாவி நிற்பதை அவ் கண்டான். அந்தத் தூதுவன் அவனை ஒரு பெரிய மாளிகைக்குள் அழைத்துச் சென்றான். எண்ணற்ற வாசல்களைக் கடந்து உள்ளே செல்லவும் அங்கே அரசனது மண்டபம் இருப்பதைக் கண்டான். அவர்களைக் கண்ணுற்ற அங்குள்ள அதிகாரிகளும், மாதர்களும் அந்தத் தூதுவனைப் பார்த்து "அவ்ஹஸன் வந்துவிட்டாரா?" என வினவினர், தூதுவன் அவர்களுக்கு பதிலளிக்கும் முறையில் புன்முறுவலுடன் அவ்-ஹஸனைப் பார்த்து தலையை யசைத்தான்.

கடைசியாக அந்தத் தூதுவன் சிப்பிரபு இருக்குமிடத்திற்கு அவ்வை அழைத்துச் சென்றான். அப்பிரபு அவன் வருவதைக் கண்டதும், எதிர் சென்று அவனை வாழ்த்தி வரவேற்று, அழகிய வேலைப்பாடமைந்த அற்புதமானதோர் அரண்மனைக்குள் அவனை அழைத்துச் செல்லலானான்.

அவ்-ஹஸனுக்கு வெடவெடத்துப் போனது. ஒன்றும் புரியாதபடி தயங்கிநின்று அப்பிரபுவைப் பார்த்துச் சொன்னான். "தாங்கள் எனக்களித்துள்ள கௌரவத்தையும், வரவேற்பையும் மனப்பூர்வமாகப் பாராட்டுகிறேன். ஆனால் தாங்கள் யார் என்பதை நான் தெரிந்துகொள்ள முடியாதவனாக இருக்கிறேன்."

அப்பிரபு பதிலுக்கு "நம் இளவரசர் தங்கள் குடிப் பெருமையையும், உயரிய குணங்களையும் பற்றிக் கேள்விப்பட்டதிலிருந்து தங்களைப் பார்க்க வேண்டுமென்று நீண்டகாலமாக ஆசைப்பட்டு வருகிறார்," என்றார்.

"அப்படியானால் தங்கள் மன்னர் யார்?" என்று மீண்டும் வினவினான் அவ்-ஹஸன்.

"இன்னும் கொஞ்சநேரத்தில் நீங்களே தெரிந்துகொள்வீர்கள்" என்றான் அந்தப் பிரபு. அவன் அதைச் சொல்லி முடிப்பதற்குள் அங்கே

---

இது ஒரு சீனக் கதை. இதன் ஆசிரியர் **பியு-சங்-லிங்** (1630-1715) சீனாவில் சான் துங் மகாணத்தில் வாழ்ந்தவர். இவர் பிறந்த ஊரின் பெயர் ஸுயு-சௌ. சீன இலக்கியத்தைச் செழித்து வளரச் செய்தவர்களில் முக்கிய ஸ்தானம் வகிக்கிறார். இவர் அரசாங்கப் பரிட்சையில் தேர்ச்சியடையவில்லை. இதன் காரணமாக இவருக்கு அரசாங்க இயந்திரத்தைக் கண்டாலே பிடிப்பதில்லை. அக்காலத்திய பழக்க வழக்கங்களையும் அரசாங்க அதிகாரிகளையும் கதைகளின் மூலம் கிண்டல் செய்வதில் இவருக்கு இணை யாருமே இல்லை. இந்தக் கதை இவருடைய சிறந்த சிருஷ்டி என்பது பலர் அபிப்பிராயம். இந்தக் கதையைத் தமிழில் தருபவர் **அ. சிங்காரவேலு.**

இரு அழகிய பெண்கள் கொடிக ளுடன் காணப்பட்டனர். அவர்கள் அவ்வை வரவேற்று அழைத்துக் கொண்டு பல வாயில்களையும் கூடங்களையும் கடந்து கடைசியாக அந்த மன்னன் வீற்றிருக்கும் சிம்மா தனத்தருகே வரலாயினர்.

அவ் வருவதைக்கண்ட மன்னன் சிம்மாதனத்தைவிட்டு எழுந்து வந்து வரவேற்று உயரிய ஆசன மளித்து அவனை அமரச் செய்தான். அவ் ஆசனத்தில் அமரவும் மன் னன் அவனுக்கு விருந்து பரிமாறும் படி கட்டளையிட்டான். மிக்கச் சுவை பொருந்திய உணவு வகை களும், திராக்ஷரஸமும் அவன் முன் கொண்டுவந்து வைக்கப்பட்டன.

அவ் ஆச்சரியத்தால் ஒன்றும் புரியாதவனாக அப்படியே உட்கார்ந் திருந்தான். அவன் பார்வை நாற் புறமும் சுழன்றது. அங்கு அரச னது சபா மண்டபத்தில் "காசியா சபாமண்டபம்" என்ற சொற்கள் பொறிக்கப்பட்டிருப்பதைக் கண் டான். அவனுக்குத் தன்னை வர வேற்று உபசரிப்பது யாரென்று தெரியாததால் அது அவனுக்கு ஒன்றும் அதிசயத்தை உணர்த்த வில்லை. மன்னன் அவனது கலங் கிய முகத்தைக் கவனித்து விட்டுச் சொன்னான்,

"தாங்கள் இங்கு விஜயம் செய்து எங்களைக் கௌரவித்ததிலிருந்து நமது உறவு இன்னும் இறுகப் பிணைந்துவிட்டது. ஆகவே நாம் சந்தோஷமாக விருந்துண்டு, கூடி மகிழ்ந்து நம்முள்ளத்தேயுள்ள சந் தேகத்தையும் பீதியையும் போக்கிக் கொள்வோம்."

இதைக்கேட்ட பிறகு அவ் அந்தப் புதிய இடத்தைப்பற்றியும், அந்தச் சூழ்நிலையைப் பற்றியும் ஒன்றும் மனதை அலட்டிக்கொள்ள வேண் டியதில்லை என்றும், விருந்துண்டு மகிழ்வதென்றும் தீர்மானித்தான். மது பலமுறை அவனுக்கு ஊற் றப்பட்டது. அவன் அதைக் குடித் துக்கொண்டிருந்தபொழுது அவன் காதுகளில் இன்னிசை கானம் ஒலிப் பதைக் கேட்டான். கொஞ்சநேரத் திற்கு அப்பால் பலவித வாத்தியங் களினூடே கந்தர்வ கானக் குர லுடன் இன்பரஸப் பாடல்கள் பாடப்பட்டன. ஆனால் அதில் சங் கீதக் கச்சேரிக்கு வழக்கமாக வாசிக் கப்படும் மிருதங்கத்தைக் காணோம். பின் அந்த மன்னன் சொல்லானு னன்: "தங்களுக்கு நாங்கள் புகழ் மொழி ஒன்று அளிக்கப்போகின் றோம்." "மேதை காசியா மண் டபத்தை தேடுகிறான்" என்பதுதான் அது என்பதாக.

அங்கு அவையில் வீற்றிருந்த பிரபுக்கள் எல்லோரும் அதற்குத் தக்க எதிர்மொழி என்ன சொல்ல லாம் என்பதுபற்றி சிந்தித்துக் கொண்டிருந்தபொழுது அவ் சடக் சென்று "செம்மை அல்லி மலரை விரும்பும்," என்று சொன்னான்.

அதைக் கேட்ட பிரபுக்கள் எல் லோரும் மகிழ்ச்சிப் பெருக்கால் கைதட்டி கரகோஷம் செய்யலாயி னர். அந்தக் கரகோஷத்தினிடையே அந்த மன்னன் சொன்னான், "உங் கள் வாயினின்றும் இந்த வார்த்தை கள் வருவது உண்மையில் போற் றத்தக்க ஓர் விஷயந்தான். என் மகள் பெயர் அல்லி. அவளை இங்கே இன்னும் சில விநாடிகளில் பார்ப் பீர்கள்.'

மன்னன் மறுகணமே உத்தர விட்டான். சில விநாடிகளில் பதி னாறு அல்லது பதினெட்டு வய துடைய தேவகன்னிபோன்ற அழக ணங்கு ஒருவள் தாதிகள் புடைசூழ அங்கே காட்சியளித்தாள். அவளது இணையற்ற பேரழகைக் கண்டு அவ் பிரமித்துப் போனான். அவனுக்கு வணக்கம் செலுத்துமாறு மன்னன் அவளிடம் சைகை காண்பிக்கவே அவள் அவ்விதமே அவனை வணங்கி விட்டு நாணத்துடன் நின்றாள்.

அவ் தன் மகளிடம் மையலுற் றிருப்பதைக் கண்ட மன்னன் தன்

சக்தி

மகளுக்குத் தக்க கணவனை தேர்ந் தெடுக்க தான் எப்படி யெல்லாம் முயற்சித்தானென்பதை சொல்ல ஆரம்பித்தான். ஆனால் அவ் அவள் காதலில் கட்டுண்டுபோய் சுற்றிலும் என்ன நடக்கிறதென்றே உணர்வே இல்லாதபடி ஸ்தம்பித்துப்போயிருந் தான். அம் மன்னன் சொன்ன வார்த்தைகள் ஒன்றுகூட அவன் காதில் விழவில்லை. மன்னன் பேசு கிருனென்று சொல்லவுந்தான், அவ் நினைவுலகிற்குத் திரும்பினுன். தன் உடைகளைச் சரிசெய்து கொண்டு மன்னனிடம் திரும்பி மன்னிப்புக் கோரிவிட்டு தனக்கு விடையளிக்குமாறு கேட்கலானுன்.

மன்னன் பதிலுக்கு "என் அத் தாணி மண்டபத்திற்குத் தங்களை வர வேற்றுள்ளதைக் குறித்து நான் பெரிதும் இன்புற்றேன். தாங்கள் இவ்வளவு விரைவில் புறப்படுவது எங்களுக்கு மிக்க வருத்தத்தை உண்டுபண்ணுகிறது. தாங்கள் எங் களைப்பற்றி யெல்லாம் மறந்துவிட வேண்டும். இல்லாவிடில் தாங்கள் மீண்டும் எங்களிடமே திரும்பவும் வந்துவிடக்கூடும் என்று நினைக் கிறேன்."

எனச் சொல்லிவிட்டு அவ்வை அவன் வீட்டில் கொண்டுபோய் விட்டுவிடுமாறு தன் ஊழியர்களுக்கு உத்திரவிட்டான். அவன் பாது காவலாளனுக அவனுடன் வந்தவன் அவனை மன்னன் தன் மகள் அல்லி யைத் திருமணம் செய்துகொள்ளும் படி சொன்னதற்கு ஏன் அவன் ஒன்றுமே பதிலளிக்கவில்லை என்று கேட்டான். அந்த இளைஞன் அப் பொழுதுதான் எப்பேர்ப்பட்ட அரிய சந்தர்ப்பத்தை இழந்துவிட்டோம் என்பதைக் குறித்து எண்ணி தனக் குள் வருத்தப்பட்டுக்கொண்டான். அவன் வீட்டை நெருங்கியபொழுது அவன் விழித்துக்கொண்டுவிட்டான்.

மாலையும் மறைந்துவிட்டது. அவ் எழுந்து உட்கார்ந்தபடியே அந்த இளவரசியைப் பற்றியும் இழந்த சந்தர்ப்பத்தைப் பற்றியும் எண்ணி வருந்தலானுன். அன்று இரவு படுக்கச் சென்றபொழுது அதே கனவை மீண்டும் காணலாமென்ற ஆசையுடன் கண்களை மூடினுன்.

ஆனல் சில தினங்கள் கழித்து அவன் தன் நண்பன் ஒருவன் வீட் டில் தூங்கிக்கொண்டிருந்தபொழுது அரசாங்க அதிகாரி ஒருவன் அவன் முன் தோன்றி அவனை மன்னன் அழைத்துவரச் சொன்னதாகச் சொல்லி அழைத்துச் சென்றுன்.

அவ் மீண்டும் அந்த அற்புத மண்டபங்களையும், எண்ணற்ற வாயில்களையும் கண்டான். அவனை அன்புடனும் சகல மரியாதைகளு டனும் மீண்டும் வரவேற்ற அந்த மன்னன் முன் அவன் தலைவணங்கி நின்றுன்.

மகிழ்ச்சியுடனிருந்த அவ் யிடம், அவன் அல்லி இளவரசியின் மீது அளவற்ற காதல் கொண்டிருப்பது அவனுக்குத் தெரிய வந்துள்ளது என்றும், அவன் சம்மதிப்பானு யின் உடனேயே திருமணத்திற்கு ஏற்பாடு செய்வதாயும் மன்னன் தெரிவித்தான். இளைஞன் இயற்கை யாகவே அதற்கு ஒன்றும் ஆட்சே பனை தெரிவிக்கவில்லை. அதன் மறு கணமே அவர்கள் முன் விருந்து பரிமாறப்பட்டது.

கடைசியாக அந்த இளவரசி தன் அலங்காரங்களை எல்லாம் முடித்துக்கொண்டு சேடிகள் புடை சூழ தலையில் முக்காடிட்டுக் கொண்டு அன்னம்போல் அழகாக நடந்து வந்தாள்.

அவ் அவளை வணங்கிவிட்டுச் சொன்னுன்: இளவரசி, தங்கள் முன்னிலையில் மரணம் பற்றிய எண்ணம்கூட ஏற்படச் சாத்திய மில்லை. ஆனல் இதெல்லாம் கன வல்லவே, கனவா, நினைவா என் பதை எனக்குச் சொல்லுங்கள்.

"என் காதலரே! நீங்களும் நானும் இங்கு ஒன்று சேர்ந்திருக்

கும்பொழுது இதெல்லாம் எப்படிக் கனவாகும்?" என்ருள் பதிலுக்கு இளவரசி மெலிந்த குரலில்.

மறுநாட்காலை இளவரசி சித்திரம் தீட்டிக்கொண்டிருந்தபொழுது, சம்பிரதாயங்களுக்கிணங்க அவ் அவளுக்குத் துணைபுரிந்தான், அவள் சித்திரம் வரைந்துகொண்டிருக்கும் பொழுதே அவள் இடையில் தரித்திருந்த ஒட்டியாணத்தைப் பிடித்திழுத்து அவள் பாதத்தையும், அவள் மணிக்கட்டையும், விரல்களையும் அளந்து பார்க்க ஆரம்பித்தான்.

அதைக் கண்டு, "உனக்கென்ன பைத்தியம் பிடித்துவிட்டதா? என்று சொல்லிச் சிரித்தாள் இளவரசி.

"அப்படியல்ல. நான் பலமுறை ஏமாற்றமடைந்துவிட்டேன். அதனுல்தான் சரியாக ஊர்ஜிதம் செய்துவிட எண்ணிவிட்டேன். இதெல்லாம் உண்மையில் கனவாகி விட்டாலும் உன்னைப்பற்றிய ஞாபகங்களை எண்ணி உள்ளம் உவகையடையுமல்லவா?" என்ருன் அவ்.

அவர்கள் இருவரும் அவ்விதம் பேசிக்கொண்டிருந்தபொழுது, பணிப்பெண்களில் ஒருத்தி, 'ஐயோ! ஐயோ! ஒரு பெரும் பூதம் அரண்மனைக்குள் வந்துவிட்டது. மன்னர் சுரங்க அறைக்குள் போய் புகுந்துவிடுவார். நாம் எல்லாம் அழியப் போகிருேம்!" என்று சொல்லி உரக்கக் கத்திக்கொண்டே ஓடிவந்தாள்.

அவ் இளவரசியை நோக்கினுன். இளவரசி கண்ணீர் வடித்தவாறு தன்னை இந்த ஆபத்துவேளையில் விட்டுப் பிரிய வேண்டாமென்று கெஞ்சிய வண்ணம், "இந்த தெய்வாதீனமான ஆபத்து வேளையில் நம் பந்தவ்யம் குலையாது உறுதியுடனிருக்க வேண்டும். இப்பொழுது என் இராஜாங்கம் எல்லாம் அழிந்துவிடுமே. நான் என்ன செய்வேன்?" என்று சொல்லிக் கதறினுள்.

விஷயம் என்னவென்று அவ் கேட்கவே, மன்னன் மேஜை மீதிருந்த ஓர் லிகிதத்தை எடுத்துக் கொடுத்து, அதைப் பிரித்து அதில் என்ன எழுதியிருக்கிறதென்று படித்துச் சொல்லும்படி அவ்விடம் சொன்னுன். அந்த லிகிதம் கீழ்க் கண்டவாறு இருந்தது:

"மாக்ஷிமை பொருந்திய மன்னர் சர்க்காரின் பிரதம காரியதரிசி, ஒரு பெரும் பூதம் வந்திருப்பதனல் இந்த சாம்ராஜ்யத்தின் உயிரைப் பாதுகாக்கும் பொருட்டு அரச சபையை உடனடியாக வேறிடத்திற்கு மாற்றும்படி அறிவித்துக் கொள்கிருர். 5-வது மாதம் 6-ந் தேதியிலிருந்து சுமார் 10000 அடி உயரமுள்ள பிரமாண்டமான பூதம் ஒன்று அரண்மனை வாசலுக்கு வெளியே சுருட்டிக்கொண்டு கிடப்பதாகவும் இதுவரை நம் சாம்ராஜ்யப் பிரஜைகளில் 13800 பேர்களுக்கு மேல் அதற்கு இரையாகிவிட்டதாகவும், எங்கும் அழிவின் சின்னங்கள் காணப்படுவதாகவும் மஞ்சள் வாசலின் அதிகாரியிடமிருந்து தகவல் வந்துள்ளது. அந்தத் தகவல் கிடைக்கவும், தங்கள் ஊழியன் உடனே அந்த இடங்களுக்குச் சென்று சோதித்துப் பார்க்க அங்கே பிரமாண்டமான ஓர் உருவம் இருப்பதைக் கண்டான், அதன் தலை ஓர் மாபெரும் மலையைப்போன்று இருக்கிறது; அதன் கண்கள் ஏரிநீரைப் போன்று இருக்கின்றன. அது தலையை நிமிர்த்தும் ஒவ்வொரு தட்வையும் கட்டடங்கள் எல்லாம் அதன் வயிற்றுக்குள் போய்விடுகின்றன; அது அவற்றை ஜீரணித்துவிட்டு வீடுகளையும், சுவர்களையும் வெளியே கக்கிவிடுகின்றது. எங்கும் வீடுகளும், சுவர்களும் நாசமடைந்து கிடக்கின்றன. தொன்றுதொட்டு இந்நாள் வரை சரித்திரம் இப்படிப்பட்ட ஓர் அழிவைக் கண்டதே இல்லை. நம் புராதனப் பெருமை வாய்ந்த அழகிய மண்டபங்களும், கோவில்களும் அழியப்போவது இப்

பொழுதோ, இன்னும் கொஞ்ச நேரம் கழித்தோ என்று தான் சொல்லவேண்டிய அபாயத்தை நெருங்கிக்கொண்டிருக்கிறது. எனவே மாக்ஷிமை பொருந்திய தங்களை இதே க்ஷணமே அரச குடும்பத்துடன் புறப்பட்டு, வேறெங்கேனும் வசதியான ஓர் இடத்தில் போய் தங்கியிருக்குமாறு பிரார்த்திக்கின்றோம்."

அவ் அந்த லிகிதத்தைப் படித்து முடித்ததுதான் தாமதம். "பூதம்" என்று உரக்கக் கத்திக்கொண்டே ஓர் தூதுவன் ஓட்டோட்டமாக உள்ளே ஓடி வரலானான்.

அதைக் கேட்டு அங்கிருந்தவர்கள் அனைவரும் பரபரப்படைந்தனர். நாற்புறங்களிலும் அழுகுரலும், ஓலமும் அவ்வின் காதுகளுக்கு எட்டியது. அவ் நடுநடுங்கினான்.

மன்னன் ஆத்திரத்துடனும், துக்கத்துடனும் அவ்வைப் பார்த்து அவனிடம் இத்தகைய துரதிர்ஷ்ட நிலைக்கு உள்ளாக்கிய மனைவியைப் பற்றி நினையாது தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்படி கூறினான். ஆனால் கண்ணீருடன் கைகளைப் பிசைந்துகொண்டு நின்ற இளவரசி அவன் காலடியில் விழுந்து இந்த அபாய வேளையில் தன்னைத் தனியே கைவிட்டுப் பிரியலாகாதென்று மன்றாட ஆரம்பித்தாள்.

காலில் விழுந்து மன்றாடும் இளவரசியை அவ் பெருந்தன்மையுடன் தூக்கிவிட்டு மன்னனிடம் திரும்பி அவனை வணங்கி, அவர்கள் வந்து தங்க சம்மதிப்பதானால் தன் எளிய இல்லத்தில் இடமளிப்பதாகச் சொன்னான்.

"சம்மதம் கேட்கக்கூடிய நேரம் இதுவல்ல. தாமதம் செய்யாது இப்பொழுதே எங்களை உங்களிடத்திற்கு அழைத்துக்கொண்டு போய் விடுங்கள்" என்றாள் இளவரசி இடைமறித்து.

உடனே அவ் வெகு சீக்கிரமாகவே அவளைத் தன் சொந்த வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வரலானான். இளவரசி மகிழ்ச்சியுற்றவளாய் தான் வாழ்ந்த அரண்மனையைக் காட்டிலும் இந்தச் சிறிய இல்லம் எவ்வளவோ சிறந்தது என்று சொல்லிவிட்டு,

"இப்பொழுதே என் தந்தையையும், தாயையும், அரண்மனை எவலாட்களையும், மந்திரி பிரதானிகள் முதலியோரையும் இங்கே அழைத்துக்கொண்டு வந்துவிடுங்கள்." என்றாள்.

இதைக்கேட்ட அவ் இடியோசை கேட்ட நாகம் போன்றாகிவிட்டான். அவள் தந்தையின் பரிவாரங்களுக்கெல்லாம் எப்படி அவனால் இடவசதி செய்துகொடுத்து அவற்றை வைத்து காப்பாற்றமுடியும். ஆகவே அவன் முதலில் ஆட்சேபித்தான். இளவரசிக்கு கோபம் வந்துவிட்டது. உதவி வேண்டிய தருணத்தில் அவளுக்கு உதவி செய்யமுடியாத ஒருவர் கணவன் என்று சொல்ல எள்ளளவும் தகுதியில்லை என்பதாகச் சொல்லி அழ ஆரம்பித்துவிட்டாள். அவளது அழுகையும், விம்மலும் வர வர அதிகமாகியது. கலங்கிப்போயிருந்த அவ் அவளுக்கு எவ்வளவோ சமாதானம் சொல்லி, அவளை சாந்தப்படுத்த முயற்சித்துக்கொண்டிருக்கும் வேளையில், அவன் துரதிர்ஷ்டவசமாக கண் விழித்துக்கொள்ளவும் அவை அத்தனையும் கனவாக இருப்பதைக் கண்டு ஏமாற்றமடைந்தான்.

அவன் காதுகளில் ஙொய் என்ற ரீங்கார சத்தம் மட்டும் இன்னும் ஒலித்துக்கொண்டேயிருந்தது. சுற்றிலும் கவனித்தான். இரண்டு மூன்று தேனீக்கள் அவன் தலையணையிலிருந்தன. அவன் அவற்றைப் போய்விடுமாறு சொல்லி விரட்டியடித்தும்கூட அவைகள் அவன் கட்டளைக்குக் கீழ்ப்படியாது அசையாமல் அப்படியே இருந்து மறியல் செய்யலாயின.

அவன் உடனே தன் நண்பனைக் கூப்பிட்டான். நண்பன் வரவும் அவர்கள் இருவரும் அந்த அறையிலும், அவன் உடைகளிலுமாக இன்னும் ஏராளமான தேனீக்கள் இருப்பதைக் காணலாயினர். அவ் ஆச்சரியத்தால் பிரமித்துப் போனான். ஆனால் அவன் நண்பன் உடனே ஓர் தேன்கூடு கொண்டு வந்து வைக்கும்படி அவனுக்கு யோசனை கூறினான். அவ் அவ் விதமே செய்தான். அந்த அறையிலிருந்த தேனீக்கள் மட்டுமின்றி, தோட்டத்திலிருந்த தேனீக்கள் பூராவும் கூட்டம் கூட்டமாக பறந்து வந்து அந்தக் கூட்டுக்குள் அடையலாயின.

அவ்வும் அவனது நண்பனும் அந்தக் கூட்டம் எல்லாம் எங்கிருந்து வருகின்றன என்பதை ஆராய்ந்து பார்க்கலானார்கள். அது பக்கத்தில் வசித்துவரும் ஓர் வயோதிகனின் தேன் கூட்டிலிருந்து வருவதைக் கண்டனர். அந்தக் கூடு திறக்கப்பட்டு கிடந்தது. அதில் அவ் கனவில் கண்ட பூதத்தைப்போன்ற பிரமாண்டமான மலைப் பாம்பு ஒன்று இருப்பதையும் அவர்கள் கண்டனர்,

அந்தத் தேனீக்களைப் பொறுத்த வரை. அவைகள் வருடந்தோறும் சந்ததிகளைப் பெருக்கிக்கொண்டு பெருத்த அளவில் அவ்வுடன் தங்கியிருந்தன.

# பறவையின் கதை

முன் ஒரு காலத்தில் ஒரு பறவை தனக்கென்று ஒரு வீடு கட்டிக் கொள்ள வேண்டுமென்று ஆசைப் பட்டது. எப்படி வீடு கட்டுவது? யோசனை செய்து பார்த்தது யோசித்தது, யோசித்தது, அதற்கு வழி ஒன்றும் புலப்படவில்லை.

'ஒரு கோடறி கூடக் கிடையாது. ஒரு கருமானும் இல்லை, சரி அது தான் போகட்டுமென்றால் கோடரி செய்யக்கூடிய ஒரு ஆள் கூடக் காணோமே' என்று அது நினைத்தது

அதற்கு வீடு கட்டிக்கொள்ள ஒரு வழியும் இல்லை.

"நமக்கு என்ன வேண்டிக் கிடக்கிறது. வீடு இல்லாவிட்டால் குடியா முழுகிப் போய்விடும்? ஒரே ஒரு இரவுதானே? இரவு சுலபமாகப் போய்விடப் போகிறது" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டது. அப்படியே கீழே பனியில் துப் படுத்துக் கொண்டது.

தினசரி இரவு முழுவதும் பனியின் மேல் படுத்திருக்கும். அதிகாலையில் எழுந்துவிடும். சிறகையடித்துக்கொண்டு பரந்த ஆகாயத்தில் பறந்து சத்தமிட்டுக் கூவிக் கொண்டு தனது நண்பர்களைத் தேடித் திரியும். தனது நண்பர்களைச் சந்திக்கும். கீழே இறங்கி பூமிக்கு வந்து நண்பர்களுடன் சேர்ந்து விளையாடும்.

அந்தப் பறவைகள் சுற்றிச் சுற்றி விளையாடும். புதருக்குள் போகும். சின்னஞ்சிறு பொந்துகளைத் தேடும். கூடுகள் கட்டும். சின்னஞ் சிறு முட்டைகளை இட்டு அடைகாத்துக் குஞ்சுகளைப் பொறிக்கும். குஞ்சுகளைக் கவனமாக வளர்த்துவரும்.

தங்கள் குஞ்சுகளை வயலுக்குக் கூட்டிச் செல்லும். புழுக்களையும் பூச்சிகளையும் பிடித்து அவைகளுக்கு ஊட்டும். தங்கள் குஞ்சுகளைக் கூட்டிக்கொண்டு பரந்தவான வீதியில் உல்லாச பவனி வரும். மீண்டும் பனிக்காலம் வந்ததும் பனிக்கட்டிகளின் மேல் படுத்து உறங்கும்.

"ஓர் இரவில் என்ன வந்துவிட்டது? வீடு கட்டி அதை பாதுகாப்பதற்குப் பதில் சுகமாக கிளைகளில் உட்கார்ந்தால் போச்சு; வயல் வரப்புகளைக் கண்குளிரப் பார்க்கலாம். வசந்த கீதம் பாடி உற்சாகமாக இருக்கலாம்." இவ்வாறு அவைகள் நினைத்துக்கொள்ளும்.

# ருஷ்யாவில் வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை.

○

எஸ். வேலாயுதம்

சோவியத் ருஷ்யாவில் வேலையின்மை என்ற பேச்சுக்கே இடமில்லை. அங்கு வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிக்கப்பட்டதோடு, அது வளர்வதற்கான மூலகாரணங்களையே வேரறுத்து விட்டார்கள்.

முதலாளித்துவ நாடுகளில் வேலையில்லாத் திண்டாட்டம் நீடித்துக் கொண்டே இருப்பதுவும், சோஷலிச அமைப்பில் அது பூண்டோடு வேரறுக்கப்படுவதும் சந்தர்ப்பவசமாக, ஏற்படக்கூடிய ஒரு நிகழ்ச்சியல்ல என்பதைச் சரித்திரம் நன்கு நிரூபித்துக் காட்டுகிறது. வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னை ஒரு குறிப்பிட்ட சரித்திர பூர்வமான உற்பத்தி முறைகளினால்தான் ஏற்படுகிறது. அந்த உற்பத்திமுறைகள் மாற்றப்பட்டால்தான் வேலையின்மை என்ற பிரச்னைக்கும் பரிகாரம் காணமுடியும் என்பதை அனுபவம் உணர்த்துகிறது.

முதலாளித்துவ சமூக அமைப்பில் வேலையின்மை என்பது தவிர்க்க முடியாத ஒரு இன்னலாகும். என்றால் அங்கு உற்பத்திமுறை தனி உடைமையை அடிப்படையாகக் கொண்டுள்ளது. தனிஉடைமை, முதலாளித்துவ உற்பத்தி முறையின் நியதியாகும். இதன் பிரகாரம் லாபத்திற்காக நடக்கும் போட்டியில் பணக்கார முதலாளி வெற்றி பெறுகிறான். இந்தப் போட்டியைச் சமாளிக்க முடியாத முதலாளி அழிந்து போவதோடு தொழிலாளியாக, அதாவது கூலிக்கு வேலை செய்பவனாக மாறிவிடுகிறான். இப்படித் துரிதமாக மூலதனம் சிலர் கையில் குவிந்து உற்பத்தி அதிகமாகும் போது, சிறு உற்பத்தியாளர்கள் பெரும் அளவில் சீரழிந்து போகிறார்கள். இதனால் அதிகப்படியான ஆட்களுக்கு வேலை கொடுக்கவேண்டிவருகிறது. இந்தக் காரணத்தினால் தான் வேலையில்லாதோர் பட்டாளம் பெருகுகிறது. பொருளாதார நெருக்கடி அதிகமாகி உற்பத்தி படுபாதாளத்தில் விழும்போது இந்த வேலையில்லாதோர் பட்டாளம் அதிகப்படுகிறது.

வேலையில்லாத ஒருவன் ஏழ்மையினால் வாடும் போது மிகவும் குறைந்த கூலியானாலும் வேலை செய்யச் சம்மதிப்பான் என்பது எல்லோரும் அறிந்த உண்மை. இதைத்தான் முதலாளிவர்க்கம் நன்கு உபயோகப்படுத்துகிறது. நெருக்கடியைச் சிருஷ்டி செய்து, அதன் மூலம் தொழிலாளர்களின் கூலியைக் குறைத்து முதலாளிகள் தங்கள் லாபத்தை அதிகப்படுத்துகிறார்கள். வேலையில்லாத் திண்டாட்

**'வேலை கொடு அல்லது சோறு போடு' என்ற கோஷம் முதலாளித்துவ உலகில் நிரந்தர கோஷமாகிவிட்டது. வேலையின்றி, உண்ண உணவின்றி தினசரி மக்கள் செத்து மடிந்து கொண்டிருக்கின்றனர். அதே நேரத்தில் சோஷலிச நாடுகளில் சகலருக்கும் வேலை; வேலைக்கேற்ற ஊதியம் என்ற நியதி வழங்குகிறது. அங்கே வேலையில்லாத்திண்டாட்டம் இல்லை; உணவின்றி சாகும் மக்களும் இல்லை.**

டம் என்பது முதலாளித்துவ உற்பத்தியோடு உடன் பிறந்த வியாதியாகும். முதலாளித்துவம் அழியும் போது வேலையில்லாத்திண்டாட்டம் இருக்க முடியாது.

சோவியத் ருஷ்யாவோ ஒரு சோஷலிச நாடு. அங்கு ஒரு புதிய சோஷலிசப் பொருளாதாரம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதன் காரணமாக அங்கு பொருளாதார நெருக்கடியும் இல்லை! வேலையில்லாத்திண்டாட்டமும் இல்லை! ஏழ்மையும் அதனுல் ஏற்படும் சீரழிவும் ஒழிந்து விட்டது.

சோவியத் பூமியில் தொழிற்சாலைகள் எந்தத் தனி நபருக்கும் சொந்தமல்ல. மாருக அவை, பொதுச் சொத்தாக, சமூகத்தின் சொத்தாக விளங்குகின்றன. தனி உடைமை, சட்டத்தின் மூலம் ஒழிக்கப்பட்டு, உடன் வேலையில்லாத் திண்டாட்டத்துக்குக் காரணமான, சுரண்டல் வர்க்கங்களையும் ஒழித்துக் கட்டினுர்கள். அங்குள்ள சகல ஸ்தாபனங்களும் சோவியத் தொழிலாளியின் கையில் இருக்கின்றன. ஆகவே நன்ருக வேலை நடைபெறுவதிலும், சிறந்த முறையில் உற்பத்தி நடப்பதிலும் அவன் கண்ணும் கருத்துமாயிருக்கிருன். சோவியத் நாட்டிலுள்ள ஒரு தொழிலாளி தனக்காகவும் தனது சமூகத்திற்காகவும்வேலை செய்கிருன். அவனது உழைப்பின் தன்மைக்கும், அளவுக்கும் தக்கபடி ருஷ்யத் தொழிலாளி கூலிபெறுகிருன். எல்லோருக்கும் சொந்தம் என்ற ஒரு நிலைமை ஏற்படும் போது உற்பத்தியில் ஒரு மாற்றம் காணப்படுகிறது. சமூகத்தில் எல்லோருடைய நலனும் அதில் பிணைக்கப்பட்டிருப்பதால், எல்லோரும் ஒன்றுபட்டுத் திறமையாக வேலை செய்கிருர்கள். இந்த நிலைமையில் உற்பத்தி நடக்கும்போது, அங்கு லாபநோக்கு முன்னிற்கவில்லை. மக்களிடம் நாள்தோறும் பெருகிவரும் பொருளாதார-கலாச்சாரத் தேவைகள்தான் முன்னிற்கின்றன.

சோஷலிசப் பொருளாதாரம் என்பது திட்டமிடப்பட்டுள்ளபொருளாதாரமாகும். இப்படித்திட்டமிடப் பட்டுள்ள பொருளர்தாரமானது, உற்பத்திச்சக்திகளின் முன்னேற்றத்திற்குக் கங்குகரையற்ற பாதைகளை வகுத்துத் தருகிறது. அத்துடன் உற்பத்திப் பொருள்களின் விநியோகத்தையும் திறம்படச் செய்கிறது .திட்டமிடப்பட்டுள்ள பொருளாதார முன்னேற்றமானது, உற்பத்தியில் ஏற்படும் அராஜகம், ஏற்றத்தாழ்வு, நெருக்கடி போன்ற இன்னல்களைத் தடுக்கிறது. ஜனசமூகத்திற்குத் தேவையான, அதிக உற்பத்தியையும், எல்லோருக்கும் வேலையையும் இந்தப்பொருளாதார அமைப்பு தருகிறது. இந்தவிதமாக சோவியத் ருஷ்யாவில் இயந்திரத் தொழில் 1928 முதல், 1953 வரை 29 மடங்கு அதிகரித்திருக்கிறது. இதே காலத்தில் உருக்கு 21 மடங்காகவும், நிலக்கரி 19 மடங்காகவும், மின்சாரசக்தி 45 மடங்காகவும் உற்பத்தியில் அதிகரித்திருக்கிறது. உற்பத்தியில் ஏற்பட்ட இந்த நிலையான முன்னேற்றத்தோடு, ஆயிரக்கணக்கான தொழில் ஸ்தாபனங்களும் புதிய, புதிய இயந்திர சாலைகளும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.இவையெல்லாம் உழைப்புச் சக்தியின் தேவையை அதிகப்படுத்தியிருக்கின்றன.

சோவியத்நாட்டிலும் வேலையில்லாத் திண்டாட்டம் இருந்தது. ஆரம்பத்தில் முதல் உலகமகாயுத்தத்தினுல் ஏற்பட்ட பொருளாதாரச் சீரழிவினுலும், உள் நாட்டு யுத்தங்களினுலும் அங்கு வேலையில்லாத் திண்டாட்டம் இருந்து வந்தது. திட்டமிட்ட தேசியப் பொருளாதாரத்தினுல் அங்கு வேலையில்லாத் திண்டாட்டம் படிப்படியாகக் குறைந்தது. தொழில் மயமாக்குதல் என்றகொள்கையை வெற்றிகரமாக அமுல் நடத்தியதன் காரணமாக நகரங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிக்கப்பட்டது. நகரப்புறங்களில்

இந்தப் பிரச்னையைத் தீர்த்துவிட்ட போதிலும், ருஷ்ய கிராமப் புறங் களில், விவசாய மக்களின் எண் ணிக்கை அதிகமாக இருந்தகாரணத் தில் அங்கே இதே பிரச்னை தீவிர மாக இருந்து வந்தது. ஆனால் அங் கேயும் சோவியத் அரசாங்கம் அதைப் பூண்டோடு ஒழித்தது. "வேலையின்மையை ஒழிப்பது" என்ற பிரச்னையை சோவியத் அரசாங்கம் தன்முதல் கடமையாகக் கொண்டது. முதலாவதாக நிலத்தில் இருந்த தனிஉடைமையை ஒழித்து, நிலம்பூராவையும் விவசாயிகளுக்கு கொடுத்தார்கள். பின்பு தனித்தனி யாக இருந்த விவசாயக் குடும்பங் களை ஒன்று படுத்தி, பெரியகூட்டுப் பண்ணைகளை ஏற்படுத்தி அதில் உயர்ந்த தொழில் நுணுக்கங்களைப் புகுத்தினர்கள். இதன் மூலம் உற் பத்தியும் அதிகப்படுத்தப்பட்டது. எல்லோருக்கும் வேலையும் கிடைத் தது. இந்த விதமாக, 1930-ம் வரு டமே, ரஷ்யாவின் நகர்ப் புறங்களி லும்சரி, கிராமப் புறங்களிலும்சரி, வேலையில்லாத் திண்டாட்டம் அறவே ஒழிக்கப்பட்டது. அதிலி ருந்து அரசாங்க காரியாலயங்களி லும், தொழிற்சாலைகளிலும், வேலை செய்வோரின் எண்ணிக்கை அபரி மிதமாக வளர்ந்தது என்பது குறிப் பிடத்தக்க விஷயமாகும்.

இந்தியாவை எடுத்துக்கொண் டால், இன்று வேலையில்லாதோர் எண்ணிக்கை வருடாவருடம்அதிகரித் துக் கொண்டேயிருக்கிறது. ஆனால் ருஷ்யாவிலோ எனில் வேலைக்குத் தேவையானவர்களின் எண் ணிக்கை வளர்ந்து கொண்டேயிருக் கிறது. இதைக்கீழ்க்கண்ட புள்ளி விபரங்கள் நமக்குத் தெளிவாக்கு கின்றன. சோவியத் ருஷ்யாவில் 1913-ம் வருடம் 114 லட்சம்பேருக்கு வேலை கொடுக்கப் பட்டது. இந்தத் தொகை 1929-ல் 12·4 லட்ச மாகவும், 1933-ல் 232 லட்சமாகவும் 1940-ல் 304 லட்சமாகவும், 1950-ல் 392 லட்சமாகவும் 1952-ல் 417 லட்சமாகவும் உயர்ந்து கொண்டே போகிறது. இந்த நிலையான வளர்ச் சி ஏதனல் ஏற்படுகிறது? தேசிய பொருளாதாரத்திலும், கலாச்சாரத் தினல் மற்றும் சகலதுறைகளிலும் மிகப்பெரிய அளவு, மனித உழைப் புச் சக்தி தேவைப்படுவதினால் தான்.

வேலையில்லாத் திண்டாட்டத்தை நிர்மூலமாக்கியது, சோவியத்சோஷ லிச அமைப்பின் ஒரு மகத்தான வெற்றியாகும். அது சோவியத் நாட்டில் பிறந்த ஒவ்வொரு மனித னுக்கும் வேலை உண்டு என்ற உரி மையை உத்திரவாதம் செய்ததோடு வேலை கொடுக்கும் பொறுப்பையும் அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக் கிறது. எல்லோருக்கும் வேலை உத்தி ரவாதம் சோவியத் நாட்டில் தான் உண்டு.

"சோவியத் ருஷ்யாவின் எல்லாப் பிரஜைகளுக்கும் வேலை செய்யும் உரிமை உண்டு. வேலைக்கு உத்தி ரவாதம் உண்டு. வேலையின்தன் மையைப் பொறுத்தும், அளவை பொறுத்தும் சம்பளம் உண்டு!"

இது எவ்வாறு சாத்தியமாயிற்று? தேசிய பொருளாதாரத்தில், சோஷ லிச அமைப்பின் பங்கும், சோவியத் சமூகத்தில் உற்பத்திச் சக்திகளின் நிலையான வளர்ச்சியும், அதன் மூலம் பொருளாதார நெருக்கடியை யும், வேலையில்லாத் திண்டாட்டத் தையும் ஒழித்ததால்தான் இன்று ருஷ்ய நாட்டில் ஒவ்வொரு பிரஜைக் கும் வேலை செய்யும் உரிமை இருக்கிறது.

இந்தவிதமாகத்தான் சோவியத் ருஷ்யாவில் வேலையில்லாத்திண்டாட் டம் ஒழிந்தது. திட்டமிடப்பட்டுள்ள சோஷலிசப் பொருளாதாரம் இருப் பதால், மீண்டும் வேலையில்லாத் திண்டாட்டம் தலைகாட்டுவதற்கே இடமில்லை. சோவியத் சமுதாயம் இன்னொரு பெரும் பிரச்னையையும் சமாளிக்க வேண்டியிருந்தது. உற் பத்தி செய்வதற்கு, ஏராளமான

திறமையான தொழிலாளர்கள், வேண்டுமல்லவா? இது ஒரு பெரிய பிரச்சினைதான். இதையும்சோவியத் அரசாங்கம் திறமையாகச் சமாளித்தது. அரசாங்க நிர்வாகத்திலும்சரி, கலாச்சாரத்திலும்சரி உற்பத்திச் சக்திகளின் ஒவ்வொரு பகுதியின் தேவைகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டு சோவியத் அரசாங்கம் திட்டமிட்டு வேலை செய்தது.

சோவியத்யூனியனில் ஏராளமான கல்லூரிகள் அமைக்கப்பட்டன. அவைகளில் வேலைக்கான பயிற்சிகளும், மற்றும் உயர்தர, மத்தியக் கல்வியும் போதிக்கப்படுகிறது. இது தவிர தேசீயப் பொருளாதாரத்தின் சகல தேவைகளையும் பூர்த்தி செய்வதற்காக, தொழிலாளர்களைத் திறமையுள்ளவர்களாக்குவதற்கான தொழிற்கல்வியும் போதிக்கப்படுகிறது. தொழிலாளர்களைத் தயார் செய்யும் தொழிற்சாலைப் பயிற்சிக் கல்லூரிகள் தொழிலாளர்களைத் தயார் செய்வதில் சிறந்த பணியாற்றுகிறது. வருடத்திற்கு ஒருகோடி பேர்கள் வரை, யந்திரசாலைகளில் சேரும் வகையில் இந்தக் கல்லூரிகள் தொழிலாளர்களைத் தயார் செய்து அனுப்புகின்றன. விவசாய யந்திரங்களில் வேலைசெய்யக்கூடிய தொழிலாளர்கள் தனிக்கல்லூரிகளில் பயிற்சி பெறுகிறார்கள். விசேஷப் பயிற்சி பெறுபவர்களுக்கென விசேஷக் கல்லூரிகள்இருக்கின்றன 1946-முதல், 1950 வரையுள்ள ஐந்து வருடங்களில் மட்டும் இந்தக் கல்லூரிகள் சோவியத் நாட்டிற்கு, 6,52,000 விசேஷப் பயிற்சி பெற்றவர்களையும், 12,78,000 செக்கண்டரி கல்வி பெற்றவர்களையும் அளித்தன.

இந்தவிதமாக இயந்திர சாலைகளிலும், சர்க்கார் அலுவலகங்களிலும் வேலை செய்பவர்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டு போகும் போதே, சோவியத் மக்களின் வாழ்க்கைத் தரமும் படிப்படியாக உயர்த்தப்பட்டது. இது எப்படிச் சாத்தியம்? ருஷ்ய அரசாங்கம் சம்பளத்தை உயர்த்திக் கொண்டே போவதோடு, மக்கள் அன்றாடம் வாங்கக்கூடிய சாமான்களின் விலையையும் படிப்படியாகக் குறைத்துக் கொண்டே வந்தது. சோவியத் நாட்டில் வேலை செய்யக்கூடிய ஒவ்வொருவனும், சம்பளத்துடன் வருடாந்திர லீவும், இலவச வைத்திய உதவியும் பெறுகிறான். பாக்டரியிலோ, அல்லது ஆபிஸிலோ வேலை செய்யக்கூடிய ஒருவனுக்கு வியாதி வந்தால், வியாதியைப் பொறுத்து அரைச்சம்பளத்திலிருந்து, முழுச் சம்பளம் வரை இனமாகக் கொடுக்கப்படுகிறது.

சோவியத் நாட்டில் அங்குள்ள மக்களுக்கு, நாளையைப்பற்றிய கவலைகிடையாது. தனக்காக, தனது சமூகத்துக்காக என்ற உணர்வுடன் ருஷ்யத்தொழிலாளர்களும், விவசாயிகளும், படித்த வர்க்கத்தினரும் ஒன்றுபட்டு வேலை செய்கிறார்கள். அதன்காரணமாக, தொழில்துறையில் அவர்கள் அற்புதங்களைச் சாதிக்கிறார்கள். தேசத்தின் பொருளாதாரத்தை மேம்பாடடையச் செய்து, சோவியத் நாடு மக்களுக்கு இல்லை என்ற சொல்லை இல்லை என்றாக்கும் பொன்னான பணியில் வெற்றி நடைபோட்டுச் செல்கிறது.

உயர்ந்தவர்கள்

உலகத்திலேயே தொழிலாளிகளும் விவசாயிகளும் தான் பரிசுத்தமான மக்கள். அவர்கள் கைகளில் புழுதி படிந்திருந்தாலும், அவர்கள் கால்களில் சாணம் ஒட்டிக் கொண்டிருந்தாலும் அவர்கள்தான் பூர்ஷ்வர குட்டி பூர்ஷ்வாக்களைவிடச் சுத்தமானவர்கள். —மா-சே-துங்

# பக்தி

ல. சண்முகசுந்தரம்

மகாவிஷ்ணு ஒரு காலத்தில் நாரதரிடம் கடன்பட்டிருந்தார். கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கு ஒரு தவணையும் குறிப்பிட்டிருந்தார். தவணையில் கடனைக் கொடுக்க முடியாவிட்டால் தன்னையே கொடுத்து விடுவதாகவும் வாக்களித்திருந்தார். கடன் தொகையோ மகாவிஷ்ணுவின் எடைக்கு எடையான தங்கக் கட்டி.

தவணைக் காலமும் வந்துவிட்டது. ஆனால் விஷ்ணுபெருமானிடம் தங்கக் கட்டிதான் கிடையாது. நாரதரோ கணத்திற்குக் கணம் அரட்டுகிறார். விஷ்ணுவைக் கூட்டிக் கொண்டு போய்விடுவதாக வேறு பயமுறுத்துகிறார்.

பார்த்தாள் சத்தியபாமை. விஷ்ணுவைத் தராசின் ஒரு தட்டில் உட்காரவைத்துத் தன் நகை முழுவதையும் மறு தட்டில் எடுத்து வைத்தாள். தராசின் முள்ளோ இம்மி அளவேனும் அசையவில்லை.

அந்த வேளை ருக்மணிதேவி அங்கு வந்து சேர்ந்தாள். விஷயத்தை விசாரித்தாள். விஸ்ணுவை ஒருமுறை வலமாக வந்து வணங்கி விட்டு ஒரு துளசி இலையை நகைத் தட்டில் வைத்தாள். அவ்வளவுதான்.

நகைத் தட்டு தரையையே தொட்டு விட்டது. விஷ்ணு உட்கார்ந்திருந்த தட்டோ அந்தரத்தில் தொங்கியது.

புராணக் கதை இப்படி முடிகிறது. பக்தியின் தன்மையையும் பெருமையையும் தெளிவாகச் சொல்லுகிறது.

தற்காலத்தில் பக்தியை வளர்ப்பதற்காக எத்தனையோ மகாநாடுகள் கூட்டப்படுகின்றன. ஆனால் மேடைக்கு உள்ளும் வெளியும் என்ன பேசிக்கொள்கிறார்கள்?

நேற்றுச் சாப்பிட்ட உணவு வகைகள். இன்றையச் சமையலின் தரம். பிரயாணத்தில் ஏற்பட்ட சிரமபரிகாரங்கள். வாகனாதிகளின் தாரதம்மியங்கள் இவைகளைப் பற்றிய விமரிசனங்கள்தான் பிரமாதமாக இருக்கும்.

முந்தின வருடத்து லாப நஷ்டங்களும், இவ்வருட வியாபாரத்தின் சாதகபாதகங்களும் மெள்ள மெள்ள முணுமுணுத்துக் கடைசியில் அம்பலம் ஏறுவதும் உண்டு.

சும்மா இருக்கிற வேளைகளில்கூட நம்முடைய சின்னஞ்சிறு இதயங்கள் இறைவனை நினைத்து ஏங்குகின்றன. ஆனால் மகாநாட்டிற்கு முன்னும் பின்னும் இறைவனை அடியோடு மறந்தே விடுகின்றன. வேண்டாத காரியங்களில் விழுந்து விழுந்து அவை உழலச் செய்கின்றன.

பக்தி மகாநாட்டால் நல்ல மனிதர்களுக்குப் பணச் செலவும் அப்பாவிகளுக்குச் சிரமுந்தான் மிச்சம்.

வெள்ளிப் பணத்தின் சலசலப்பு ஒலிக்கோ கரன்ஸி நோட்டின் சொரசொரப்பு நாதத்திற்கோ இறைவன் கட்டுப்படுவது கிடையாது.

பணத்தைக் கொடுத்து இறைவனை விலைக்கு வாங்க முடியாது. சஞ்சலமற்ற இதயத்தைக் கொடுத்தால்தான் அவனை வாங்க முடியும்.

மார்ச் 54.

இதை அப்பர் சுவாமிகளும் தெரிந் திருக்கிறார். தெளிவாகவே தெரிந் திருக்கிறார். அவருடைய தெளிந்த அனுபவம் தமிழ்ப் பாஷையின் கவி தையாக வெளிவருகிறது. எப்படி?

"கரவாடும் மனத்தகத்தே
கவவாதானைக்—கரவிலார்பால்
விரவாடும் பெருமானை—
விடைஏறும் வித்தகனை"

வஞ்சனையும் சஞ்சலமும் உள்ள இதயம் எவ்வளவுதான் இறைவனை வேண்டி நின்றாலும், இறைவன் அதைக் காலால் எட்டி உதைத்து விடுவான். ஆனால் அமைதியான இதயமோ இறைவனைத் தேடாம லிருந்தாலும் சரிதான், இறைவனே அதைத் தேடிவந்து கலந்து கொள் வான். பேதமில்லாதபடி கலந்து கொள்வான் என்று அப்பர் சுவாமி கள் சொல்லுகிறார்.

அவர் மேலும் சொல்கிறார்.

இறைவனுடைய கையில் அணை யாத ஒரு ஜோதி உண்டு. அந்த ஜோதியின் மூலம் நல்ல இதயத்தைத் தெரிந்துகொண்டால் இறைவனுக்கு ஒரே ஆனந்தந்தான். சடாபாமும், அதிலுள்ள பாம்பு (அரவு)ம் ஆடும் படியாக அவன் கூத்தாடுவான். கூத் தாடிக் கூத்தாடி அந்த இதயத்திற் குள் பக்குவமாக நுழைந்து கலந்து விடுவான்.

பிறகு அவனை அந்த இடத்தை விட்டுக் கிளப்பவே முடியாது.

"அரவாடச் சடைதாழ
அம்கையினில் அனல்ஏந்தி
இரவாடும் பெருமானை
என்மனத்தே வைத்தேனே"

இராவாடும் பெருமான்-நல்ல இதயத்தை இறைவனே நேரில் வந்து பிச்சை கேட்பான். நிரந்தர மாகத் தங்கத்தான்.

"கரவாடும் மனத்தகத்தே
கவவாதானைக் கரவிலார்பால்
விரவாடும் பெருமானை
விடைஏறும் வித்தகனை

அரவாடச் சடைதாழ
அங்கையினில் அனலேந்தி
இரவாடும் பெருமானை
என்மனத்தே வைத்தேனே"

அப்பர் சுவாமிகளுடைய பாட்டில் உண்மையும் தெளிவும் பிரகாச மாகத் தெரிகிறது.

தெளிவு ஊறி ஊறி வலுவடைந்து விட்டால் உறுதி தானாகவே வந்து விடும்.

மனிதர்களுடைய குணாதிசயத்தை —அதிலும் ஏதென்ஸ் நகரத்துக் கனவான்களுடைய இயல்பைத் தெளிவாகத் தெரிந்திருந்த காரணத் தால்தான் சாக்ராட்டீஸால் நஞ்சைக் குடித்து விட்டுக் கோப்பையை அமைதியாகக் கீழேவைக்க முடிந் தது.

நாமும் சாக்ரட்டீஸை உறுதியான உள்ளம் படைத்தவர் என்று புகழு கிறோம்.

மகமது நபியின் இரண்டாவது மனைவி நபியிடம் கீழ்க்கண்டவாறு கேட்டாள்.

"என்னை நீங்கள் மனப்பூர்வமாக நேசிக்கிறீர்களா?" நபி—"இல்லை. நான் மனப்பூர்வமாக நேசிப்பது என் முதல் மனைவியைத்தான். காரணம் அவளால்தான் நான் சொல்கிற ஒவ்வொரு உண்மையை யும் ஏற்றுக்கொள்ள முடிந்தது."

இந்த விதமாக நபி சொல்லியதற்கு எவ்வளவு துணிவு இருந்திருக்க வேண்டும். அவ்வளவு துணிவும் உள் ளத்தின் தெளிவிலிருந்து பிறந்தது தான்.

நம்முடைய அடியார்களுக்கோ தெளிவில் குறைவில்லை, துணிவிலும் குறைவில்லை.

காரைக்கால் அம்மையாருடைய பாடலைப் பார்த்தாலே போதும். துணிவென்பதற்கே பக்திதான் ஆதி வித்தோ என்று சொல்ல நேரிடும்.

அவர் சொல்கிறார்:

"ஒன்றே நினைந்திருந்தேன்
ஒன்றே துணிந்தொழிந்தேன்

ஒன்றேஎன் உள்ளத்தின்
உள்ளடைத்தேன்......"

அடடா! அந்த ஒன்றுதான் எது? இதோ.

"......ஒன்றே (அக்)
கங்கையான் திங்கள்க்
கதிர்முடியான் பொங்கொளிசேர்
அங்கைஆன்கு ஆளாம் அது."

"நான் என்பதும்எனது என்பதும் உண்மையில் அவனும் அவனுடைய துமேதான். இதை மிச்சம் சொச்சம் இல்லாமல் தெரிந்து கொண்டேன். தெரிந்து கொண்டு என்னையே இறைவனுக்கு அர்ப்பணித்து விட்டேன். இது ஒன்றைத்தான் என்னால் செய்ய முடிந்தது" என்று காரைக்கால் அம்மையார் சொல்லும் பொழுது நமக்கே பக்தி உண்டாகி விடுகிறது.

பக்தி துணிவை எப்படி வெளியிடுகிறது. அந்தத் துணிவிற்குத் தமிழ் எப்படி வடிவம் கொடுக்கிறது என்பது கவியில் கிடக்கிறது.

உண்மை புலப்படப் புலப்படத் தெளிவு பிறக்கும். தெளிவு பிறக்கப் பிறக்கத் துணிவு ஏற்படும். தெளிவும் துணிவும் இணைந்து கலந்துவிட்டால் இதயம் நிறைய ஆனந்தம் பொங்கி வழிந்துவிடும். ஆனந்தம் ஏற்பட்டு விட்டால் பேதாபேதம் மறைந்துவிடும். எல்லாம் அவனே, அவன் செயலே என்கின்ற இன்பப் பெருக்கு இதயத்தை மூக்கி முக்கிக் கரைத்துவிடும்.

பட்டிணத்து அடிகள் இந்த ஆனந்தத்தை எப்படி வெளியிடுகிறார் என்று பார்ப்போம்.

"நம்முடைய உடம்பைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் ஆறாத புண் என்றுதான் குறிப்பிட வேண்டும். மூடமுடியாத ஒன்பது பொந்துகளோடு கூடிய இந்தப் புண்ணிலே (உடலிலே) உள்ள கட்டிகளுக்கும் கழலைகளுக்கும் எண்ணிக்கை உண்டா, இதை ஆற்றுவதற்குத் தான் சஞ்சீவி உண்டா?

ஒன்றே ஒன்று உண்டு. அதைப் பட்டிணத்தாரே சொல்லட்டும்.

"ஓடுவிழுந்து சீழ்ப்பாயும்
ஒன்பதுவாய்ப் புண்ணுக்கு
இடுமருந்து நானறிந்து—
கொண்டேன் கடுஅருந்தும்
தேவாதி தேவன்
திருஒற்றி ஊர்த்தெருவில்
போவார் அடியின்
பொடி"

[ஓடு - கட்டி. கடு அருந்தும் - விஷத்தை அள்ளி உண்ட. போவார் - அடியவர்கள். பொடி - புழுதி.]

இறைவனை நாடிச் செல்லும் அடியவர்களின் பாத தூளியே போதும் முத்தியைத் தருவதற்கு. பட்டிணத்தாருடைய இதயம் நமக்கு நன்றாகத் தெரிகிறது. அந்த இதயத்தில் பாகுபாடே கிடையாது. ஆனால் பக்தி, தெளிவு, உறுதி இம்மூன்றும் வேண்டிய மட்டும் இருக்கிறது. அவர் இதயத்தில் உள்ள ஆனந்தமோ நம்முடைய நாவிற்கு வந்து விடுகிறது.

## 2

ரசிகமணி டி. கே. சி. யிடம் மூன்று அல்லது நான்கு நிமிடங்கள் உட்கார்ந்தால் போதும். இலக்கியம், கலை, தத்துவம், விஞ்ஞானம், சமூகம் முதலிய ஒவ்வொரு துறைகளைப் பற்றியும் தெரிந்து கொள்ளலாம். இதுவரை கண்டும் கேட்டும் இராத பல அதிசயங்களையும் நுட்பங்களையும் ஒவ்வொரு துறைகளிலிருந்தும் அவர்கள் எடுத்துக் கொடுப்பார்கள்.

உண்மை என்பது சிறிய விஷயத்திலிருந்து பெரிய விஷயம்வரை ஒவ்வொரு துறைகளிலும் நம்முடைய இதயத்தைப் பொறுத்தவரை தலைகிழாகக் கிடக்கிறது. அதைப் பக்குவமாகவும் ஜாக்கிரதையாகவும் திருப்பிப் போடுவதுதான் ரசிகமணியின் தொழில். தாங்க முடியாத வியப்பும் மகத்துவமும் நிறைந்த இந்தக் காரியத்தை ரசிகமணியின் எளிமையான ஆனால் உறுதி செறிந்த வார்த்தைகள் எப்படியோ சாதித்துவிடுகின்றன.

ரசிகமணி சமயத்தைப் பற்றியும் அடிக்கடி சொல்வார்கள்.

அவர்கள் சமயத்தைப் பற்றி எடுத்துச் சொல்வது.

"ஒரு தங்கக் கட்டி, ஒரு வெள்ளிக் கட்டி, ஒரு இரும்புத் துண்டு இவைகளைச் சோதித்துப் பார்த்தால் அணு என்பதுதான் மிஞ்சும். அணுவில், தங்க அணு, வெள்ளி அணு, இரும்பு அணு என்கின்ற வித்தியாசமே கிடையாது. ஒன்று இரண்டு மூன்று முதலிய எண்ணிக்கை வேறுபாடு அணுச்சேர்க்கையிலும் ஏற்பட்டுப் பொருள்களை வடிவத்திலும் குணத்திலும் வித்தியாசப்படுத்துகின்றன. உதாரணமாக, தங்கத்தின் அணுச்சேர்க்கையிலும் வெள்ளியின் அணுச் சேர்க்கையிலும் எண்ணிக்கை வேறுபட்டதுதான். ஆனல் தங்கத்தின் அணுவும் வெள்ளியின் அணுவும் வேறுபட்டது அல்ல.

அணுக்களைப் பிரித்துப் பார்த்தால் கட்டுக்கடங்காத சக்தியும்—ஜோதியும், இயக்கமும்தான் இருக்கின்றது. எல்லாம் ஒரு சக்தியே. விவரித்துச் சொல்ல முடியாத இந்த மாபெரும் சக்தியே கோடான கோடி அண்டங்களில் உள்ள கோடானகோடி சராசரங்களையும் விளைவித்தது.

எங்கும் நிறைந்த சக்தியை என்ன என்று சொல்வது. இறைவன் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனல் ஒவ்வொரு பொருளிலும் இறைவன் நிறைந்திருக்கிறன் என்று சொல்லக் கூடாது. ஒவ்வொரு பொருளுமே இறைவன்தான். இறைவனைத் தவிர வேறு ஒன்றுமே கிடையாது."

இந்த விதமாக ரசிகமணி சமயத்தைப் பற்றிச் சொல்வார்கள்.

"உண்மையின் ஆணிவேராக உள்ள இந்தத் தத்துவத்தை இப்படி இயல்பாகச் சொல்லத் தமிழ்தான் ஏற்றது" என்றும் அவர்கள் சொல்வார்கள்,

அவர்கள் மேலும் சொல்வார்கள். இறைவனுடைய பேருள்ளத்தில் ஆனந்தக் கனவுகள் உண்டாகிக் கொண்டே இருக்கின்றன. ஒவ்வொரு கனவும் ஒவ்வொரு தத்துவமா(பொருளா)க வடிவெடுத்து வருகின்றன. அவைகளின் தணியாத வருகைதான் நம்முடைய கண்களுக்கு தோற்றம். இருப்பு, மறைவு என்று தெரிகின்றன. ஒவ்வொரு செயலும் நம்முடைய கண்களைக் காட்டி மறைக்கின்ற (இறைவனுடைய) செப்படிவித்தைதான்."

ரசிகமணி இப்படிச் சொல்லிவிட்டு,

"தில்லை மூதூர் ஆடிய திருஅடி
பல்லுயிர் தோறும் பயின்றனன் ஆகி"

[திருவடி - இறைவனுடைய பேரருள்.]

என்ற மாணிக்க வாசகருடைய பாடலையும் பாடிக் காட்டுவார்கள். உண்மையும் அதனல் ஏற்படுகிற பக்தியும் சேர்ந்து நம்மை உருக்கிவிடும். எல்லாம் மூன்று அல்லது நான்கு நிமிடங்களில்தான்.

ரசிகமணி சொல்வதிலிருந்துதான் சமயம் லகுவானது, தெளிவானது என்று தெரியவருகிறது.

சாக்ரட்டீஸின் கொள்கை உச்சி முதல் உள்ளங்கால்வரைத் தத்துவத்தால் பின்னப்பட்டது. ஆனலும் அது ஒரு சமயமாக இயங்க முடியவில்லை. ஏசுநாதருடைய உபதேசங்களோ தத்துவத்தை அப்புறப்படுத்திவிட்டுக் கவர்ச்சிகரமான மானிட நீதியை மாத்திரம் எடுத்துச் சொல்லியது. ஜனவிகிதாசாரப்படிப் பார்த்தால் கிருஷ்தவ சமயம் ஒரு பெரிய சமயந்தான் என்பதில் ஐயம் இல்லை. இனி சைவ சமயமோ விஞ்ஞான பூர்வமான உண்மையை உள்ளடக்கமாகக் கொண்டது. மானிட சமூகத்தின் நிரந்தரமான ஆனந்தத்தைக் குறிக்கோளாகக் கொண்டது.

கோவில்களிலுள்ள கண்டாமணிகளும், நந்தா விளக்குகளும் எப்படியோ பக்தியை உண்டாக்கி விடுகின்றன.

கோபுரங்களோ நம்முடைய சிறுமையை நமக்குக் கௌரவமாக எடுத்துக் காட்டுகின்றன.

நாதசுரமோ நம்முடைய ஆணவத்தை நாம் கழற்றி விட்டால் நமக்கும் இறைவனுக்கும் தூரமே இல்லை என்பதை மௌனமாக விளக்கிக் காட்டுகிறது. கோலப் பொடிகளும் மதில் சுவரிலே போடப்பட்டுள்ள காவிப் பட்டைகளும் மானிட வாழ்க்கையிலே விசிறி எறியப்பட்டுள்ள அழகையும் ஆனந்தத்தையும் திரட்டிக் கொடுக்கின்றன.

மதில் சுவரின் உச்சி முதல் தேவாலயத்தின் ஒவ்வொரு இடத்திலும் கம்பீரமாக வீற்றிருக்கும் நந்தி (காளை) யோ நம்முடைய வாழ்க்கையும் இறைவனுடைய வாழ்க்கையும் வெவ்வேறு வகைப்பட்டதல்ல என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

தேவாலயத்திலுள்ள ஒவ்வொரு அம்சத்திலும் மனிதச் செயலின் நுட்பத்தையும் வேலைப்பாட்டையும் கண்டு கொள்ளலாம். அதேபோல மனித வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் சமயத்தின் புனிதமான அழகையும் பெருமையையும் புரிந்து கொள்ளலாம்.

சமயம் என்பது மானிட ஜீவன்களும் இறைவனும் ஒன்று சேர்ந்து ஆனந்தப்பட ஏற்பட்ட அரிய சாதனம்.

வாழ்க்கையும் சமயமும் இந்த விதமாக இணைந்து பிணைந்த காரணமாகத்தான் ஜீவனும் ஆனந்தமும் நிலைத்து நிற்கின்றது.

கவிதைகளோ சமயத்திற்கு அழியாத புகழையும் பெருமையையும் கொடுத்துக் கொண்டே இருக்கின்றன.

கவிதைகளை நம்மால் உணரமுடிகிறபோது சமயமே கவிதைக்காக ஏற்பட்டது தானோ என்று சொல்லத் தோன்றுகிறது.

அதனால்தான் எதற்கும் கட்டுப்படாத இறைவன் கவிதைக்கு மாத்திரம் கட்டுப்பட்டுக் கிடக்கிறான் என்று முன்னோர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

கவிதையின் மூலமாகத்தான் உண்மையான சமய ஞானத்தைப் பெற முடியும் என்று சொன்னால் குற்றம் இல்லை.

இறைவனே கவிதைக்கு உள்ளே ஒளியும் பொழுதுதான் மகிமையையும் விஸ்வரூபத்தையும் பெற்றுக் கொள்கிறான் என்று சொன்னாலும் குற்றம் இல்லை. மாணிக்கவாசகருடைய பாடல்களில் ஒன்றைப் பார்க்கலாம்.

மாணிக்கவாசகர் நான் எனது என்கின்ற மயக்கத்திலிருந்து விடுதலை பெற்றவர். அதாவது இறைவனோடு கலந்த நிலையில் உள்ளவர். அப்படியானால் அவருடைய ஆனந்தத்திற்கு வரம்பு இருக்க முடியுமா?

**“கயல் மாண்ட கண்ணிபங்கன்**
**கலந்(து) என்னை ஆண்டலுமே**
**அயல் மாண்(டு) அருவினைச்சுற்**
**றமும் மாண்(டு) அவனியின்மேல்**
**மயல்மாண்டு மற்றுள்ள**
**வாசகம் மாண்(டு) என்னுடைய**
**செயல் மாண்ட ஆபாடித்**
**தெள்ளேணம் கொட்டாமோ”**

[கயல் மாண்ட கண்ணி பங்கன் - உமாதேவியின் கண்கள் வாளை மீனைப் போல இப்படியும் அப்படியும் பிறழக்கூடியவை. அந்த உமாதேவி (சக்தி)யைத் தன்னுள் ஒரு பகுதியாக அடக்கிக் கொண்டவர் சிவபெருமான். அந்த இறைவன் என்னை எப்படியோ கூடிக் குலாவி விட்டான். அவ்வளவுதான்.

அயல் மாண்டு - என்னைச் சுற்றி ஒரு சூழ்நிலையும் அதனால் ஏற்படும் பாதிப்பும் இருந்ததே அது ஒழிந்தது விட்டது.

அருவினைச் சுற்றமும் மாண்டு— நல்வினை தீவினை என்ற செயல்களும் அதன் விளைவுகளும் என்னை விட்டு விலகிவிட்டன. அவனியின் மேல் மயல் மாண்டு - இந்தப் பிரபஞ்ச நிகழ்ச்சிகளில் இயல்பாக உள்ள

ஆசையும் மயக்கமும் எப்படியோ என்னை விட்டு நழுவி விட்டன.

கடையில் மிஞ்சியது வார்த்தைதான் அதுவும் நின்று விட்டது. என்னுடைய செயல் என்ற பேதமை உணர்ச்சி ஒன்று இருந்ததே அதுவும் போய்விட்டது. அடடா! இறைவன் ஒருவன்தான். அவனோடு நான் கலந்து விட்டேன். எங்கும் ஒரே ஆனந்தம்தான்.]

இந்தப் பாட்டை ஒரு குத்துக்கல் கேட்டாலும் சரி. அதுவும் ஆனந்தப்பட்டுக் குதித்துவிடும். உத்சாகம் பாட்டில் கரைபுரண்டு ஓடுகிறது. விளையாட்டு வெறியாகி அதுவும் தாங்க முடியாத வெறியாகப் பாட்டில் தத்தளிக்கிறது.

ஆனந்தத்தையே வேரோடு பிடுங்கிக் கொண்டு வருகிற இந்தப் பாடலைப் பல நபர்கள் தங்கள் துக்கத்தை வெளியிடுவதற்காகவும், கசப்பைக் கக்குவதற்காகவும் புலம்பி ஒப்பாரி வைப்பதைப் பார்த்திருக்கிறோம்.

எல்லாம் பக்தசிரோமணிகள் தான். பக்தி வளர்க்கும் பிரச்சார மேடைகளில்தான். மாணிக்க வாசகருடைய பாடல்கள் ஆனந்தத்தோடு இறைவனுடைய இயல்பை வெளியிட வந்த சாசனங்கள். உன்னதமான சாதனங்கள்.

ஆனால் மாணிக்கவாசகருடைய பாடல்கள்தான் முக்கியமாக அழுகைக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

ஒரு பொருள் எவ்வளவுக்கு எவ்வளவு மேலானதாக இருக்கிறதோ, அது அவ்வளவுக்கு அவ்வளவு அவமானப் படுத்தப்படுகின்றன.

இதையாரிடம் சொல்ல. கடவுளே சமயத்தைக் காப்பாற்றுவீராக!

●

## அக்பர் வாக்கு

( துன்மார்க்கத்துக்கு சோம்பலே காரணம். நன்மையை நாடுகின்றவன் ஒரு தொழிலைக் கற்று அதில் பிரகாசிக்க வேண்டும்.

உலக வாழ்க்கைக்குத் தேவையான கல்விச் செல்வத்தையும், பொருளையும் தேடுவதில் ஒவ்வொரு நாளையும் வாழ்நாளின் கடைசி நாளாகவே பாவித்து, இன்றைக்குச் செய்ய வேண்டியதை நாளைக்குச் செய்யலாமென்று காலதாமதம் செய்யாமல் அன்றே செய்ய வேண்டும். )

( சரீர சுகத்துக்கு நித்திரை தேவை என்பது உண்மையே. ஆயினும் மனித ஜன்மம் அடைய முடியாத பேருகையால், மனிதர் நெடுநேரம் நித்திரையில் போக்காமல் விழித்திருந்து காரியங்களைக் கவனிக்கவேண்டும். )

குருவுக்கு மிஞ்சிய சிஷ்யனாக இருந்தாலும் குருவினிடத்தில் மரியாதையாகவும் வணக்கமாகவும் நடக்கவேண்டும்.

பகுத்தறிவு என்ற ஆபரணம் மனித உயர்வுக்கே காரணம். ஆகையால் அது கற்பிக்கின்ற வழியிலிருந்து விலகாமல் நடப்பதே மேன்மை.

மனிதன் தன் இரைப் பையை கேவலம் பிராணிகளின் பிரேதக் குழியாக்குவது தகுதியல்ல.

மனிதர் மாமிசம் சாப்பிடுவது எங்கும் நிறைந்த பெரு வழக்காக இருக்கின்றது. நோவெடுக்காவிட்டால் தங்கள் உடலையே உண்பார் போலும்.

பொய் புனை சுருட்டைக்கண்டு பிடிப்பது மிகவும் கஷ்டம். பேசுவோனுடைய வார்த்தைகளை நன்றாக நினைப்பதே அதைக் கண்டுபிடிப்பதற்கான உபாயம்.

# ஓரியர்கள்

மா. இளங்கோவன்

ஒரிசா மாகாணத்தில் மலைச்சாரல்களில் ஒரு பூர்வ குடிகள் வாழ்ந்து வருகிறார்கள் இவர்களுக்கு ஒரியர் என்று பெயர்.

ஆந்திர மாகாணத்தில் உள்ள விசாகப்பட்டிணத்தில் இருந்து சுமார் இருநூறு மைல்கள் தூரத்தில் இருக்கும் அடர்ந்த காட்டுப் பிரதேசத்தில் இந்த ஓரியர்கள் வாழ்கிறார்கள். இந்த இடம், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் விதமாக, விழிகளுக்கு எட்டிய தூரம்வரை பசுமை பற்றிப் படர்ந்து பாங்காக பரிமளிக்கும் எழிலோடு சிறந்து விளங்குகிறது.

ஒரியர்கள் அதிக நாகரிகம் அடையாத நிலையில் இன்று வாழும் இந்தியப் பழங்குடி மக்கள். இவர்களது மொத்த மக்கட்தொகை 9,687,429 என 1901-ம் ஆண்டில் கணக்கிடப்பட்டது. உற்சாக உவகையை உமிழும் உல்லாசமான இடத்தில், கடுமையான உழைப்பாளிகளாகத் திகழ்பவர்கள் இவர்கள். கன்னங்கரியநிறம் பெற்றவர்கள். மலைச்சாரல்களிலும், ஆற்றங்கரை அருகிலும் கூட்டங்கூட்டமாக வாழ்வதில் இவர்களுக்குப் பெரும் விருப்பம். இயன்றவரை இயற்கையோடு இயைந்து வாழும் இயல்பினர்கள்.

இவர்களது மொழி, தெலுங்கும் கன்னடமும் கலந்த ஒருவகைக் கூட்டுமொழி. எனினும், ஒரு தெலுங்கு, கன்னடச் சொற்களைக்கூட கண்டுகொள்ள இயலாதவாறு இரண்டறக் கலந்து, வளர்ச்சி அடையாத கொச்சை முறையிலேயே பேசுகிறார்கள். இந்தக் காட்டுப் பிரதேசங்களை அடுத்துள்ள நகரங்களில் சிலர் குடியேறி நாகரீகமாகவும் வாழ்கிறார்கள். இவர்களோடு பேசும்போது தான் மொழியைப்பற்றிய இந்த உண்மை தெரிய வருகிறது. விரல் விட்டு எண்ணிவிடக்கூடிய இரண்டொரு பத்திரிகைகளைக்கூட நகரத்தில் வாழ்பவர்கள் வெளியிட்டு வருகிறார்கள்; சில நாவல்களையும் எழுதியுள்ளனர். ஆனால், இந்தமலைவாழ் மாந்தர் மட்டும் இன்னமும் நாகரீகம் அறியாதவர்களாகவே நகரங்களில் வாழ்பவர்களது முன்னோர்களின் நினைவுச்சின்னங்களாக, கல்வி அறிவின்றி இருக்கின்றனர்.

இவர்கள் மிகுந்த பயந்த இயல்புடையவர்கள். கைக்கடிகாரத்தைக் காதில் வைத்து அதன் சப்தம்கேட்டு மிரண்டோடும் அளவுக்குப் புதுமைகளைக் கண்டு வியப்புப்பெறுபவர்கள்! ஆனால், ஓரிருநாட்கள் அவர்களோடு தங்கிப் பழகிய பின்னரோ, ஆழ்ந்த அன்பும் மிகுந்த மரியாதையும் காட்டி ஒழுகுபவர்கள். காட்டுத்தேன், பெரியபலாநாவற்பழம். கொய்யாப்பழம் முதலிய பொருட்களை, இயற்கை அன்னையின் மடியிலிருந்து கவர்ந்து வந்து நமக்குத்தந்து, நம் இன்பத்தைக் கண்டு இதயம் பூரிப்பார்கள். பழைய மிரட்சியும் அவர்கள் கண்களில் தென்படாமல் இருக்காது!

ஒரியர்களில் எல்லோரும் பெரும்பாலும் விவசாயிகள்தாம். மாரி காலம் துவங்கியதும், உழுது பயிரிட்டு அடுத்த ஆண்டுவரை தேவையான உணவுப் பொருட்களைச் சேகரித்து வைத்துக்கொள்வார்கள் அதன் பிறகு, மீன் பிடிப்பது, விறகு

இந்தியப் பூர்வகுடிகளில் ஒருவரான ஒரியர்களைப் பற்றிய சில குறிப்புகள் தான் இந்த ரசமான கட்டுரை.

வெட்டுவது, ஆற்றில் படகோட்டுவது, காட்டிலுள்ள பழங்களைப் பறித்து வருவது போன்ற சில்லரை வேலைகளில் ஈடுபட்டு, அடுத்த மாரிக் காலம் வரும்வரை பொறுமையோடு காத்திருப்பார்கள்.

குடும்பத்தில் பெண்ணைவிட ஆணுக்குத்தான் உயர்வு அதிகம் என்பது இவர்கள் கொள்கை! நகரத்தில் ஆணும் பெண்ணும் ஏறக்குறைய வேறுபாடற்ற வாழ்வு நடத்தமுடிகிறது; நாம் கண்டுபிடித்துள்ள விஞ்ஞானக் கருவிகளும் இதற்கு ஓரளவு உதவுகின்றன! ஆனால், நாகரீகத்தின் நிழலே தென்படாத காடுகளில் வாழும் பெண்கள், ஆண்களை நம்பியே ஆகவேண்டியதாகிறது. ஆகவேதான், ஆண்மகனுக்கு உயர்ந்த இடம்தர இங்குள்ள பெண்கள் கூட பின்வாங்குவதில்லை!

ஆண்கள் நல்ல வளர்ச்சிப்பெற்று உரம்வாய்ந்த உடல் உறுப்புகள் உள்ளவர்கள்; ஓரியப் பெண்கள் மிகவும் குள்ளமானவர்கள். நாலரை அல்லது ஐந்து அடிகளுக்கு மேல் வளர்ச்சியுற்றப் பெண்களை இங்கு காண்பதரிது.

பெண்கள் முழங்கைவரை வெள்ளிக் காப்புகளை அணிந்திருப்பார்கள். கழுத்து முழுவதையும் பெரிய பெரிய வளையங்களால் மூடிமறைத்திருப்பார்கள். இளம் பெண்கள், காதுமுழுமையிலும் துளைகள் செய்து, அதில் கம்பி அளவில் வட்டவடிவமான வெள்ளிநகைகளை இணைந்திருப்பார்கள்.

ஓரியப்பெண்களுக்கு, "ஆமதாபாத் சேலையும், ஆர்க்கண்டி ஜாக்கெட்டும், கெம்பு வளையும், பச்சைக்கல் மூக்குத்தியும் அணிந்துகொள்ளத் தெரியாது! ஒரு துணியை தங்கள் உடலில் சுற்றி இடதுதோளில் ஒரு முடிபோட்டுக் கொள்வார்கள்! மூக்கில் துளைசெய்து வெள்ளிக்கம்பிகளைத் தொங்கவைத்துக் கொள்வார்கள், அவ்வளவுதான். பொதுவாக எல்லா இளம் பெண்களுமே இந்த விசித்திர "நகைகளை" அணிந்து கொள்கின்றனர். இவர்களை "நகை தாங்கிகள்" என்று நம்மவர்கள் வேடிக்கையாகக் குறிப்பிடுவார்கள்!

மற்ற பூர்வகுடிகளைப் போலவே இவர்களது திருமண வழக்கமும் விசித்திரமானது. இவர்களிடையே இருக்கும் சிறப்பான அம்சமும் அதுதான். மணமகளை இளைஞன், தான் விரும்பும் பெண்ணைத் தூக்கிக் கொண்டு வீட்டிற்கு ஓடிவருவான்! மற்றவர்கள் அவனை அடிப்பார்கள்; புடைப்பார்கள், கல்லெறிவார்கள்! அந்தப் பெண்ணை அவனிடமிருந்து பறித்துவிடத்தங்களால் என்னென்ன செய்ய முடியுமோ அவைகள் அத்தனையையும் செய்வார்கள்! ஆனால், இளைஞன் பிடிவாத வைராக்கியத்தோடு அவளைத் தூக்கிவந்து வீடு சேர்த்துவிடவேண்டும்! அப்பொழுதுதான் அவர்கள் இருவருக்கும் மணம் நடக்கும்! இந்த வழக்கம் ஏனெனில், இவர்கள் பெரும்பாலும் மலைகளிலேயே சிறிது சிரமமான வாழ்க்கையை நடத்துபவர்கள். அதனால் குடும்ப வாழ்விலும் அநேக தொந்தரவுகள் நேருவது இயல்பு. மணமகன் எந்தக் கொடுமைக்கும் பணியாமல் பதறாமல் மணமகளைத் தூக்கி வந்து வீட்டை அடைந்துவிட்டால், அதைப்போலவே அவனது குடும்பத்தில் ஏற்படும் தொல்லைகளையும் - அது எப்படிப்பட்டது எனினும்-அவனால் சமாளிக்க முடியும் என்பது சம்பிரதாயம்! குடும்பத் தலைவனின் உள்ள உறுதியைச் சோதிக்கும் ஒரு பரிசோதனையாகவே இதனை நடத்துகிறார்கள்! வெற்றி பெற்ற மணமகனை எல்லோரும் கைதட்டி ஆரவாரம் செய்து கௌரவிப்பார்கள.

தங்களைப் படமெடுக்க இவர்கள் அனுமதிப்பதேகிடையாது. காரணம் ஒருவகை பயம்தான்!

ஓரியர்களின் முக்கியத்தொழில் விவசாயம் என்று மேலே குறிப்பிட்டேன். மலைச்சாரல்களில் இவர்களால் எப்படி நெல் வேளாண்மை

செய்ய முடியும்? இந்தக் கஷ்டமான பிரச்னையைத் தீர்க்க ஒரு சிறந்த வழியைக் கையாளுகிறார்கள். அதாவது, குன்றின் சரிவை, நம்நாட்டிலுள்ள வயல்களின் நீள அகலத்திற்கு அடுக்கடுக்காக வெட்டி சமதளமாக்கிக் கொண்டே போவார்கள். உச்சியிலிருந்து அடிவரை ஒன்றன் கீழ் ஒன்றாக வரிசையுற வயல்கள் அமைந்துவிடும்! அதன் இரு ஓரங்களிலும் நீர்க்கால்களை நிர்மாணித்து ஒவ்வொரு வயலோடு இணைத்து விடுவார்கள்! நாம் கீழிருந்து பார்த்தால், ஏதோ ஒருபெரிய பூத மனிதன் மலைமீது ஏறிச் செல்ல வெட்டி வைக்கப்பட்ட படிகளைப் போலவே அழகாகத்தென்படும்! அதில், பயிர்கள் வளர்ந்து, பசுமை நிறத்தோடு பரிணமித்திருக்கும் போது பார்க்க எத்தனை எழில் பொங்கும் காட்சியாக இருக்கும் என்பதை எண்ணிப்பாருங்கள்! மழை பெய்ய ஆரம்பித்ததும், இலங்கைத் தேயிலைத் தோட்டத்தைப் போல,மேலே தொடங்கி ஒவ்வொரு வயலுக்கும் வரிசையாக நீர்பாய்ந்து கொண்டே வந்து, கடைசியில் காட்டாற்றில் கலந்து மறையும்!

ஓரியப் பெண்கள், வயல்களில் களை பிடுங்கும் போதும், நாற்றுநடும் போதும் பாட்டுப் பாடிக்கொண்டே வேலை செய்வார்கள்.

மழைக்காலம் ஆரம்பித்துவிட்டால் இவர்களுக்கு ஒரே கோலாகலம் தான்! நான் அங்கு தங்கி இருந்தது மே முதல் செப்டம்பர்வரையுள்ள ஐந்து மாதங்கள்-அதாவது மழை காலத்தின் ஆரம்பம்! இந்தக்காலங்களில் மிகவும் நெருங்கி அடர்ந்த பனிப்படலம், வெண்மேகங்களைப் போல எந்தநேரமும் சுற்றிப் படர்ந்து இருக்கும். இதற்கு இன்னொரு காரணம், இந்த மலைகள் கடல் மட்டத்திலிருந்து இரண்டாயிரம் அடிகள் உயர்ந்திருப்பது! சேற்றுக் குழம்பான மண்ணின் மீது தரைமுழுவதும் புழுக்கள் நெளிந்து கொண்டிருக்கும்! குளிர் உயிரையே தாக்கும்! அந்த மாதங்களில் பெரும்பாலும் சூரியன் தென்படுவதே இல்லை! இருபத்துநான்கு மணி நேரமும் ஓயாமல் ஒழியாமல் மழை பெய்து கொண்டே இருக்கும்! மழைக்கோட்டும், காலணியும்இன்றி வெளியே தலை நீட்ட நம்மால் முடியாது.

ஆனால், அவர்கள் தடிப்பான இலைகளைச் சேர்த்துப்பின்னி, உடலை மூடிக்கொண்டு சாவதானமாக நடந்து சென்று கொண்டிருப்பார்கள்! அதைத் தொப்பிபோலத் தலையில் பொருத்தி, ஒரு கயிற்றால் தாடையோடு கட்டிக்கொண்டு, எங்கோ மாலைப்பொழுதை உல்லாசமாகக் கழிக்கச் செல்பவர்களைப் போல மெதுவாகப் போய்க்கொண்டிருப்பார்கள்! அப்பொழுது அவர்களைப் பார்க்க வேடிக்கையாக இருக்கும்!

ஆரம்ப காலங்களில் இவர்கள் ஆடைகூட அணியாமல் இருந்தார்களாம்; இரண்டாம் உலகப்போரின் போது, இந்த மலைக்காடுகளில் வந்து தங்கிய பட்டாளத்தார்கள் தாம், இவர்களுக்கு ஆடை அணியக் கற்றுக் கொடுத்தார்களாம்! இப்பொழுதும்கூட வேறுசில இடங்களில், முற்றிலும் வெளி மக்கள் தொடர்பே இல்லாமல் வாழும் ஓரியர்கள் நிர்வாணமாகவே இருப்பதாக ஒரு பெரியவர் கூறினார்.

ஓரியர்கள் வாரம் ஒருமுறை ஒரு குறிப்பிட்ட நாளில் சந்தைகூடி, பண்டமாற்று முறையில் பொருட்களை வாங்கிச் செல்வார்கள். நம் நாடுகளில் மூன்று அல்லது நான்கு ரூபாய்கள் வரை விலை பெறும் பெரிய காட்டுப் பலாப்பழங்களை, இவர்களிடமிருந்து நான்கணவுக்கு இன்னும் சிறிது பேரம் பண்ணினால் மூன்றணா முதல் இரண்டணாவுக்குள் வாங்கி விடலாம்! வெளிமக்களின் தொடர்பு இல்லாதபோது இவர்கள் காசுகளைக் கண்டதில்லை. பிறகு, நம்மவர்களோடு பழகிய தோஷமோ

என்னவோ தெரியவில்லை, இப்பொழுது பணம் சேர்க்கவும் கற்றுக் கொண்டார்கள். பெண்கள், பெரும்பாலும் வயது சென்றவர்கள், வெள்ளி நாணயங்களை மோதிரமாகவும் சங்கிலிகளாகவும் கோர்த்து அணிந்துகொள்கிறார்கள். பணத்தை நோட்டுகளாக வாங்கக் கண்டிப்பாக மறுத்துவிடுகிறார்கள்; நாணயங்களாக மட்டும் பெற்றுக்கொள்வார்கள்.

ஓரியர்கள் மிகுந்த பலம் வாய்ந்தவர்கள். பெரிய மரங்களை உட்குடைந்து படகுகளாக்கிக் காட்டாற்றில் செலுத்திச் செல்பவர்கள். நாவற் பழங்களும், கொய்யாப்பழங்களும் இவர்களுக்கு விருப்பமான சிற்றுண்டி! ஒரு குச்சியில் இரண்டு பக்கங்களிலும் காவடிகட்டி சாமான்களை எடுத்துச் செல்வதில்தான் இவர்களுக்கு ஆசை.

இறந்தவர்களின் உடலைஎவ்வளவு விரைவில் புதைக்க முடியுமோ அவ்வளவு விரைவில் புதைத்து, அதன் மீது மரக்கிளைகளையும் தழைகளையும் நட்டு, கற்களை வைத்துவிடுவார்கள். காட்டு மிருகங்கள் அவற்றைத் தோண்டி எடுத்துவிடக்கூடாது. என்பதற்காகவே இந்தப் பழக்கம்! பிணத்தை எரிக்கும் வழக்கம் இவர்களிடம் அறவே கிடையாது!

நான் அங்குத் தங்கி இருந்த ஐந்து மாதங்கள் முழுவதும் மருந்துக்குக்கூட ஒரு குரங்கைக்காண முடியவில்லை. இவ்வளவு அடர்ந்த காடுகளில் ஒரு குரங்கு கூடகாணப் படவில்லையே, இதென்ன அதிசயமாக இருக்கிறது என்று கேட்ட போது, "ஓரியர்கள் வாழும் இடங்களில் குரங்குகள் வாழ்வதில்லை" என்ற பழமொழி பதிலாக வந்தது. குரங்கு, இவர்களுக்கு மிகமிக விருப்பமான மாமிச உணவு என்பது பின்னர் தெரிந்தது!



## பாட்டு

ரஸ ஞானமில்லாதபடி பல்லவிகளும் கீர்த்தனங்களும் பாடுவோர் ஸங்கீதத்தின் உயிரை நீக்கிவிட்டு வெற்றுடலை அதாவது பிணத்தைக் காட்டுகிறார்கள். இக்காலத்து ஸங்கீத வித்துவான்களிலே பலர் ஸங்கீதத்துக்கு நவரஸங்களே உயிர் என்ற செய்தியை அறியாதவர்கள்.

முத்துசாமி தீக்ஷிதர், தியாகையர், பட்டணம் சுப்ரமணிய ஐயர் முதலியவர்களின் கீர்த்தனங்களிலே சிலவற்றை அதிக 'ஸங்கதி' களுடன் பாடுவோரே 'முதல்தர வித்துவான்கள்' இந்தக் கீர்த்தனங்களெல்லாம் ஸம்ஸ்க்ருதம் அல்லது தெலுங்கு பாஷையிலிருக்கின்றன. ஆகவே, முக்காலே மும்மாகாணி 'வித்வான்' களுக்கு அந்தக்கீர்த்தனங்களின் அர்த்தம் தெரியாது. எழுத்துகளையும் பதங்களையும் கொலை செய்தும் விழுங்கியும் பாடுகிறார்கள். அர்த்தமே தெரியாதவர்களுகு 'ரஸம்' தெரிய நியாயமில்லை.

நானும் பிறந்தது முதலாக இன்று வரை பார்த்துக் கொண்டு வருகிறேன். பாட்டுக்கச்சேரி தொடங்குகிறது. வித்வான் 'வாதாபி கணபதிம்' என்று ஆரம்பஞ் செய்கிறார். 'ராம நீ ஸமானமெவரு', 'மரியாத காதுரா', 'வரமு லொஸதி'........ ஐயையோ, ஐயையோ, ஒரே கதை.

எந்த 'வித்வான்' வந்தாலும் இதே கதைதான். தமிழ் நாட்டு ஜனங்களுக்கு இரும்புக் காதாக இருப்பதால், திரும்பத் திரும்பத் திரும்பத் திரும்ப ஏழுட்டுப் பாட்டுக்களை வருஷக் கணக்காகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். தோற்காதுள்ள தேசங்களிலே இந்தத் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

* * *

வித்வான்கள் பழைய கீர்த்தனங்களைப் பாடம் பண்ணிப் புராதன வழிகளைத் தெரிந்து கொள்ளுதல் அவசியம். ஆனால் தமிழ் சபைகளிலே எப்போதும் அர்த்தந் தெரியாத பிறபாஷைகளில்பழம்பாட்டுகளை மீண்டு மீண்டும் சொல்லுதல் நியாயமில்லை. அதனால் நமது ஜாதி ஸங்கீத ஞானத்தையிழந்து போகும்படி நேரும்

— பாரதியார்

# உயிர் என்றால் என்ன?



ஜே. பி. எஸ். ஹால்டேன்

உயிர் என்பது என்ன? இந்தக் கேள்விக்கு நான் விடையளிக்கப் போவதில்லை. எதிர்காலத்தில் யாராவது முழு விடை அளிக்க முடியுமா என்பதும் சந்தேகம்தான். சிவப்பு என்றால் என்ன, வலி என்றால் என்ன என்பதை நாம் உணருகிறோம். அவை என்ன என்று வருணிக்க முடியுமா? அதுபோலவே உயிரோடிருப்பது என்றால் என்ன என்பதை நாம் உணர முடிகிறது. ஆனால், வேறு ஏதாவது ஒரு பொருளின் அடிப்படையில் அதனை வருணிக்க முடியவில்லை. அதனால் "உயிர் என்றால் என்ன?" என்ற கேள்வி மடத்தனமான கேள்வி என்று தள்ளிவிட முடியாது. ஒரு மனிதன் உயிருடன் இருக்கிறானா இல்லையா என்று நாம் கேட்கிறோம். பூதக் கண்ணாடி மூலம் பார்த்து அறியக்கூடிய நோய்க் கிருமிகள் உயிருடன் இருக்கின்றன என்பது நமக்குத் தெரியும். வைசூரி, சிச்சிலுப்பை போன்ற வியாதிகளை உண்டாக்கக்கூடிய கிருமிகள் உயிருடன் இருக்கின்றனவா என்பது சந்தேகம்தான்.

ஆகையால், உயிர் என்ற சூட்சமப் பொருளை வேறு ஜடப்பொருள்களின் அடிப்படையில் வருணிக்க வேண்டியது அவசியந்தான். அந்த வருணனை பூரணமாக இல்லாவிட்டாலும் பரவாயில்லை. "உயிர் என்பது ஜடத்தின் மீது ஆத்மாவின் தூண்டுதல் என்று சிலர் சொல்லுகிறார்கள். மனிதனுக்கோ அல்லது நாய்க்கோ ஆத்மா இருப்பதாக அவர்கள் நிச்சயமாகச் சொல்லலாம். ஆனால் சிப்பிக்குள் இருக்கும் முத்துப் பூச்சிக்கோ, உருளைக் கிழங்குக்கோ ஆத்மா இருப்பதாக அவர்கள் சொல்லுவார்களா? வேறொரு விஷயம். மேற்கூறிய இலக்கணத்தின்படி கலைகளும் புத்தகங்களும் உயிருள்ளவையாகும். ஏனெனில், அவை ஜட வஸ்துக்களாயினும் அவற்றை சிருஷ்டித்த கொள்கைகளும் உணர்ச்சிகளும் அவற்றில் பொதிந்து கிடக்கின்றன. வாசிப்பவர்களது உள்ளங்களை அவை இயக்குகின்றன. ஆகையால் இந்த வரையறுப்பு சரியல்ல. பெர்னாட்ஷா, ஸி. இ. எம். ஜோட் போன்ற அறிஞர்கள் 'உயிரை' வேறு விதமாக வரையறை செய்கிறார்கள். உயிருள்ள பிராணிகளில் "உயிர்ச் சக்தி" என்று ஒன்று இருப்பதாக அவர்கள் நம்புகிறார்கள். அப்படி ஒன்று இருப்பதாக நான் நம்பவில்லை. இருப்பதாகவே வைத்துக்கொள்ளலாம். இந்த உயிர்ச் சக்தியை அறிவது எப்படி? நகருதல், உஷ்ணம் போன்ற ஜடத்தின் சலனத்தின் மூலம்தான் அதனை உணர வேண்டும். அப்படியானால் அடிப்படையில் தான் உயிருக்கு இலக்கணம் கூற

---

உயிர் என்பது தான் என்ன? இந்தக் கேள்விக்கு பலர் பலவித பதில்களைக் கொடுப்பர். வேதாந்தி கொடுக்கும் பதில் வேறு. விஞ்ஞானி கொடுக்கும் பதில் வேறு. பிரபல பிரிட்டிஷ் விஞ்ஞானியின் பதிலை ஸ்ரீ. நா. வானமாமலை மொழி பெயர்த்துத் தருகிறார்

வேண்டும். சாதாரணமாக உயிருள்ள பிராணிகளை அதன் உருவம், அமைப்பு இவற்றிலிருந்துதான் கண்டுகொள்கிறோம். உயிர்போன சில மணி நேரங்களுக்கு அவை மாறுவதில்லை. அப்பொழுதும் அவற்றிற்கு "உயிர்ச் சக்தி" இருப்பதாகச் சொல்லலாமா? குட்டி போட்டுப் பால் கொடுக்கும் பிராணிகள், பறவைகள் இவை உடல் குளிர்ந்துவிட்டால் செத்துப்போய் விட்டன என்று நிச்சயமாய்ச் சொல்லுகிறோம்.

ஆனால் தவளை அல்லது நத்தைக்கு இந்தச் சோதனை பொருந்தாது. (அவற்றின் உடல் எப்பொழுதுமே குளிர்ச்சியாகத்தான் இருக்கிறது.) நாம் தொடும்போது அவை நகரா விட்டால் அவை இறந்துவிட்டன என்று நிச்சயிக்கிறோம். செடிகள் உயிரோடு இருக்கின்றனவா என்று கண்டறிய ஒரே ஒரு வழிதான் உண்டு. அது அவை வளருகின்றனவா என்று பார்ப்பதுதான். அதைக் கண்டறிய பல மாதங்கள் ஆகலாம். இந்தச் சோதனைகளுக்கெல்லாம் பொதுவான அம்சம் எது? மாறுதல் அல்லது சலனம் ஆகும். உஷ்ணம் என்பதும் அணுக்களின் ஒழுங்கற்ற சலனமே. இவை அனைத்தும் வெளித் தோற்றத்தைப் பற்றிய பௌதிக சோதனைகளே. அமைப்பைப் பற்றிய ரசாயன சோதனைகள் அல்ல. வெளித் தோற்றத்தைவிட்டு உள்ளமைப்பு சம்பந்தமான ரசாயன சோதனைகள் மூலம் உயிரைப்பற்றி நிரம்பத் தெரிந்துகொள்ள முடியும். இவ்வாறு நான் சொல்வதால் ரசாயன விஞ்ஞானத்தின் மூலம் உயிரைப் பற்றிய முழு விவரங்களையும் தெரிந்து கொள்ளலாம் என்று நீங்கள் நினைக்கக்கூடாது. நான் சொல்வதெல்லாம், உயிர் வாழ்க்கையானது மேல் தோற்றம் சம்பந்தமான நிகழ்ச்சி என்று சொல்வதைவிட, உடலுக்குள் இருக்கும் பொருள்களின் அமைப்பில் ஏற்படும் ரசாயன மாறுதல் சம்பந்தமான நிகழ்ச்சி என்பதே பொருத்தமாகும். இதனை ஒரு உதாரணத்தின் மூலம் விளக்குகிறேன்.

ஒரு குருடனும் ஒரு செவிடனும் ஷேக்ஸ்பியர் எழுதிய "மாக்பெத்" நாடகத்துக்குச் செல்லுகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். செவிடனுக்குக் கதை எதுவும் புரியாது. குருடனுக்குக் கதை நன்றாகப் புரியும். ஏனெனில், ஷேக்ஸ்பியர் நாடகங்களில் சொற்கள் பொருள் நிறைந்தவை. கண்ணால் காணும் நிகழ்ச்சிகள் அவ்வளவு முக்கியமல்ல. இருவரும் ஒரு திரைப் படம் பார்க்கச் செல்வார்களாயின் குருடனுக்குக் கதை விளங்காது; செவிடனுக்குக் கதை விளங்கும். ஏனெனில், திரைப்படத்தில் சொற்களைவிட காட்சிகளே முக்கியம்.

உயிருள்ள எல்லா ஜந்துக்களுக்கும் பொதுவான அம்சம் ஒன்று உண்டு. அது அவற்றின் உடலினுள் சதா நிகழும் ரசாயன மாறுதல் ஆகும். பல வகையான ஜந்துக்களிலும் நிகழும் மாறுதல்களில் மிகுந்த ஒற்றுமை இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட வழியில் பொருள்கள் ஒன்றோடு ஒன்று சேர்ந்து புதுப்பொருள்களாக உருவெடுப்பதுதான் உயிரின் அறிகுறி. உயிர் என்பது முக்கியமாக ஒருவகைப்பட்ட ரசாயன மாறுதல்கள் நிகழ்வது. மேலும் அத்துடன் எல்லா உயிர்ப்பொருள்களிலும் ஒரு குறிப்பிட்ட உருவ அமைப்பும், அநேக பிராணிகளில் ஒரு குறிப்பிட்ட சலனமும், சில பிராணிகளில் ஒரு குறிப்பிட்ட உணர்வும், நோக்கமும் ஏற்படுகின்றன. பல வகையான உயிர்களின் உடலில் காணப்படும் பொருள்கள் வித்தியாசப்படுகின்றன. மரத்தில் எரியக்கூடிய விறகு இருக்கிறது. மனிதனது உடலிலுள்ள பொருள் எதுவும் பார்வைக்கு அதைப்போல் இல்லை. ஆனால் "கிளை கோஜன்" என்ற சக்தி

பொருள் மனித உடலில் இருக்கிறது. அதன் அமைப்புக்கும் ஒற்றுமை இருக்கிறது. அதைவிட மரத்தின் வேர், தண்டு, இலைகள் முதலிய பாகங்களில் நிகழும் ரசாயன மாறுதல்களுக்கும் மிகுதியான ஒற்றுமை இருக்கிறது. மனிதனைப் போலவே, வேர்களுக்குப் பிராண வாயு தேவை. ஒரு நிமிஷத்துக்கு வேர்கள் எவ்வளவு பிராண வாயுவை உட்கொள்ளுகின்றன என்று சோதனை மூலம் நாம் காணலாம். நம் உடலில் பிராண வாயு எப்படி நாம் உண்ணும் உணவுப் பொருள்களை எரித்து உஷ்ணத்தைத் தயாரிக்கிறதோ, அது போலவே தாவரங்களிலும் மாறுதல்கள் நடக்கின்றன. சீனி தானாகவே காற்றில் எரியாது. சீனியைச் சூடாக்கினால் பிராண வாயுவோடு சேர்ந்து எரியும். இதே மாறுதல் உடலினுள் உஷ்ணம் இல்லாமல் நடக்கிறது. சாதாரண உஷ்ணத்தில் இது நடப்பதற்குத் தூண்டுதலாயிருப்பது "என்ஸைம்" என்று பெயரிடப்பட்டிருக்கும் ஒருவகை ரசம். நம் உடலுக்குத் தேவையான பிராண வாயு முழுதும் இரும்பு சேர்ந்த ஒரு வகை என்ஸைமோடு முதலில் சேர வேண்டும். இந்த "என்ஸைம்" நாம் உண்ணும் உணவிலுள்ள "புரோடீன்" என்ற பொருளின் அமைப்பை உடையது. (மாமிசம், பால் பருப்பு முதலிய உணவுப் பொருள்களில் புரோடீன் இருக்கிறது) முதன்முதலில் கள்ளில் இருக்கும் "ஈஸ்ட்" என்ற "என்ஸைம்" எப்படி வேலை செய்கிறது என்பதை 1924-ல் வார்பர்க் என்ற விஞ்ஞானி கண்டுபிடித்தார். 1926-ல், நான் பச்சைச் செடிகளிலும் எலிகளிலும், "என்ஸைம்" வேலை செய்யும் முறையைக் கண்டுபிடித்தேன். உயிருள்ள எல்லா ஜந்துக்களிலும் உணவுப் பொருள்களை உடலுக்கு வேண்டிய பொருள்களாக மாற்றவும், சக்தியளிக்கவும் இந்த என்ஸைம் என்ற பொருள்கள் பயன்படுகின்றன என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

உயிருள்ள ஜந்துக்களின் உடலிலும் தாவரங்களிலும் ஏற்படும் பல மாறுதல்களுக்கு இவைதான் காரணம். உருளைக்கிழங்கில் சர்க்கரைப் பொருள் மாவாக மாறுவதும், நம்முடைய உடலில் சர்க்கரை "கிளைகோஜன்" ஆக மாறுவதும் ஒரே வகைதான். சர்க்கரைப் பொருள்கள், மது சாரமாக மாறுவதும் நமது தசை நார்கள் சுருங்கும் போது ஏற்படும் மாறுதலும் மிகவும் ஒற்றுமையுடையவை. இந்த மாறுதல்களில் முடிவில் ஏற்படும் பொருள்கள்தான் வித்தியாசப்படுகின்றன. துப்பாக்கிகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையை அதிக சிரமம் இல்லாமல் தையல் இயந்திரங்களையோ சைக்கிள்களையோ உற்பத்தி செய்யும் தொழிற்சாலையாக மாற்றிவிடலாம். அதுபோலவே ஒரு ஊருகின்ற ஜந்து தன் தோலை உற்பத்தி செய்ய அதன் உடலில் நிகழும் மாறுதல்களுக்கும், ஒரு நத்தை, தான் நகருவதற்காக உற்பத்தி செய்யும் வழுவழுப்பான திரவத்தை உண்டாக்க நிகழும் மாறுதல்களுக்கும் ஒற்றுமையுண்டு. ஆனால், முடிவில் உண்டாகும் பொருள்கள் வெவ்வேறானவை.

ஒரே மாதிரியான ரசாயன மாறுதல்கள் பல்வேறு வகையில் நிகழுவதுதான் உயிரின் அடையாளம். மிருகங்கள் உணவுப் பொருள்களை உட்கொள்கின்றன. தாவரங்கள் அவற்றை உண்டாக்குகின்றன. இரண்டிலும் பொருள்கள் சிதைவதும், புதிதாக உண்டாவதும் இடைவிடாமல் நிகழ்ந்துகொண்டேயிருக்கின்றன. முடிவில் உண்டாகும் பொருள்கள் வேறுபடுகின்றன.

எங்கல்ஸ் "புரோடீன்களின் மாறுதல் தொடர்ச்சியே உயிர்" என்று கூறினார். என்ஸைம் என்பது புரோடீன்தான். ஆகையால் அவரது கருத்து உண்மையாகவே

தோன்றுகிறது. உயிருள்ள பிராணி களின் ஒற்றுமை ரஸாயன மாறு தல்களில்தான் இருக்கிறது. ஆனால், என்ஸைம்களும் புரோடீன்களும் தங்களுடைய செயலை உடலுக்குள் மட்டுமில்லாமல் கண்ணாடிப் பாத் திரங்களிலும் நிகழ்த்தும். அவற் றிற்கு உயிருண்டு என்று எந்த விஞ் ஞானியும் சொல்லமாட்டார். முன்பு சொன்ன உதாரணத்தில் ஷேக்ஸ் பியர் நாடகத்தில் சொற்கள்தான் முக்கியம் என்று கண்டோம். அது போலவே உயிர் வாழ்தலுக்கு ரஸா யன மாறுபாடுகள் மிகவும் முக்கிய மானவை. ஷேக்ஸ்பியரது கவிதை யில் சொற்களைவிட அவற்றின் சேர்க்கையும், அமைப்புமே முக்கி யம். அதுபோலவே உயிர் வாழ்க் கையும் ரசாயன மாறுதல்களில் ஒரு குறிப்பிட்ட சேர்க்கைதான்.

இச் சேர்க்கைக்குக் குறிப்பிட்ட பண்புகள் உண்டு. தீயிலிருந்து தீ உண்டாவது போல, இச் சேர்க்கை யும் தன்னைப் போன்ற ஒரு புதிய சேர்க்கையைத் தோற்றுவிக்கிறது. ஆனால், அது தன்னைக் கட்டுப்படுத்து கிறது. தீயால் இது முடியாது. உயிர் வாழ்க்கை என்பது, ரசாயன மாறுதல்களின் சேர்க்கை என்று சொல்லும்போது, நான் ஒரு அடிப் படையான உண்மையைச் சொல்லு கிறேன். இது வாழ்க்கையில் மிக முக்கியமானது. இந்த மாறுதல் களில் சிலவற்றை நாம் கட்டுப்படுத் தக் கற்றுவிட்டோம். இந்த அறிவின் விளைவுதான் ஸல்பனமைட், பென் ஸிலின் போன்ற மருந்துகள்.

ரசாயன மாறுதல்களைக்கொண்டு "உயிரை" முற்றிலும் வருணிக்க முயலுதல் வீணாகும். ஆனால், "உயிர் வாழ்க்கை" ரசாயன மாறுபாடு களின் விளைவல்ல என்று விவாதித் தாலும் உண்மையாகாது. அது, கவிதை சொற்களால் ஆனதல்ல என்று சொல்வது போலாகும்! ★

## பண்களின் பெயர்

**டி. கே. சி**

தாமரை, நீலோத்பலம், ஆம்பல் முதலியமலர்கள் பூத்திருப்பதைக் கண்டால், அவைகளின் உருவத் தை, அற்புதமான உருவத்தை, எப்படி உண்டாக்கியது இந்தத் தடாகம் என்று அதிசயிக்கிறோம்.

அப்படி, நம்முடைய முன்னோ ர்களின் இதயத்தில் ஆழ்ந்த ஆனந்த தத்துவத்திலிருந்து பண் கள் ஒலியுருவமாய்ப் பூத்தன. அந்த இசை மலர்களின் இதழ்க ளையும், நெளிவுகளையும், குழைவு களையும் வியந்து வியந்து வியந்து அனுபவித்தார்கள், அவைகளுக் குப் பெயரிட வேண்டிய அவசிய மும்நேர்ந்தது; [வரம்பிட்ட எந்த உருவத்துக்கும் பெயரிடவேண் டிய அவசியம் நேரத்தானே செய் யும்] பெயரிடவும் செய்தார்கள். புஷ்பங்களை வைத்தே பெயரிட் டார்கள். மருதம் (மருதமலர்), குறிஞ்சி (குறிஞ்சிமலர்), பாலை (பாலை மலர்), என்று நிலத்துக் குப் பெயர் கொடுத்த மாதிரி பண்களுக்கும் பெயர் கொடுத் தார்கள்.

இந்த விதமாகப் பெயர்கொடுத் ததிலிருந்தே நம்மவர்கள் பண் களை எவ்வளவாக அனுபவித்தி ருக்கிறார்கள் என்பது தெரியவரு கிறது. பெயர் கொடுத்ததே அற்பு தம்; அதைவிட அற்புதம், தொ டர்ச்சியாகப் பாடிப் பாடி பூர்வ மான உருவத்தோடு நம் கைக்கு அந்தப் பண்கள் வந்திருப்பது தான். ★



# லெனினும் கார்க்கியும்

குருப்ஸ்காயா

விளாடிமிர் இலிச் (லெனின்) கார்க்கியைப் பற்றி சிறந்த அபிப்பிராயம் கொண்டிருந்தார். கார்க்கியின் தாய் என்ற நூலையும் நோவாவாயா ஜீன் என்ற பத்திரிகையில் பிலிஸ்டைன் கொள்கையாளர்களைத் தாக்கி யெழுதிய கட்டுரைகளையும் பெரிதும் விரும்பினார். பிலிஸ்டினிஸத்தின் சகல கொள்கைகளையும் லெனினே பெரிதும் வெறுத்தார். கார்க்கியின் அதலபாதாளம், கழுகின் கதை பெட்ரல் கீதம் முதலியன எல்லாம் அவருக்குப் பிடித்திருந்தன. கார்க்கியின் 26 மனிதர்களும் ஒரு பெண்ணும் ஆபாச வதனம் முதலிய கதைகளும் அவருக்குப் பிடித்திருந்தன.

ஒருநாள் மாஸ்கோ ஆர்ட் தியேட்டரில் அதல பாதாளம் என்ற நாடகம் நடைபெற்றபோது அவர் அதைச் சென்று பார்க்க வேண்டும் என்பதற்காக எவ்வளவு ஆர்வத்தோடிருந்தார் என்பது எனக்கு ஞாபகமிருக்கிறது. 'என் பல்கலைக் கழகம்' என்ற கார்க்கியின் நூலை அவரது அந்திம காலத்தில் நான் வாசித்துக் காட்டியபோது அதைக் கேட்டு அவர் எவ்வளவு ஆனந்தமடைந்தார் என்பதும் எனக்கு இன்னும் நினைவிருக்கிறது.

உலக வரலாற்றிலேயே என்றும் நிலைத்திருக்கக்கூடிய இரண்டு பெரிய ஜாம்பவான்கள் லெனின் - கார்க்கி. இவர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்கள். லெனினுடைய மனைவி இந்தக் கட்டுரையில் இவர்கள் இருவரின் நெருங்கிய தொடர்பை விளக்குகிறார்.

கார்க்கியின் பாத்திரங்கள் அனைத்தும் தொழிலாளர்கள்; நகரத்திலுள்ள ஏழைபாழைகள் 'அதல பாதாள'ப் பிறவிகள், வேறு எவரையும் விட லெனினுக்கு பெரிதும் ஈடுபாடு கொண்ட சமூகத்தின் அடியிலே மக்கள். கார்க்கி வாழ்க்கையை அப்படியே அதன் ஸ்தூல உருவத்தில் படைத்துக் கொடுத்தார். அடக்குமுறை, சுரண்டல், சிந்தனை வரட்சி முதலியவற்றை வெறுக்கும் கண்களோடு வாழ்க்கையைப் பார்த்தார்; ஒரு புரட்சிக்காரனின் கண்ணோட்டத்தோடு வாழ்க்கையைப் பார்த்து அதை வருணித்தார். எனவே தான் கார்க்கியின் எழுத்துக்கள் லெனினின் மனத்தில் அருமையான நெருங்கிய ஸ்தானத்தைப் பெற்றுவிட்டன.

1930-ம் வருஷத்தில் கார்க்கி எனக்கு எழுதிய கடிதம் ஒன்றில் பின்வருமாறு எழுதினர்: "காப்ரியில் இருந்த காலத்தில் அவர் என்னுடன் இலக்கியத்தைப் பற்றிப் பேசிய போது, அவர் எனது சகாப்தத்திலுள்ள எழுத்தாளர்கள் பலரைப் பற்றியும் சுருக்கமாக நறுக்குத் தெறித்தாற்போல் விமர்சனம் செய்தார். அவர்களது உண்மையான தன்மையை தயாதாட்சணியமின்றி எளிய முறையில் பட்டவர்த்தனமாக விளக்கிச் சொல்லிவிட்டார்."

ருஷ்ய இலக்கியத்தைப் பற்றிய அற்புதமான ஞானம் இலிச்சிடம் காணப்பட்டது. அவருக்கு அந்த ஞானம் வாழ்க்கையைப் பற்றிய ஞானத்துக்கு ஒரு வழிமுறையாக அமைந்திருந்தது. இலக்கியங்களில் வரும் பாத்திரங்கள் எவ்வளவுக்கெவ்வளவு எளிமை பொருந்தியவர்களாக இருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு லெனின் அந்தப் பாத்திரங்களைப் புகழ்ந்து பேசுவார்.

1907-ம் வருஷத்தில் லண்டனில் நடந்த கட்சி காங்கிரஸின்போது கார்க்கியோடு விலாடிமிர் இலிச் நெருங்கிய பழக்கம் கொண்டார். அங்கு அவர் கார்க்கியைக் கவனித்தார்; அவரோடு பேசினர்; அவரை எப்படியோ தம்மிடம் ஆத்மார்த்தமாகக் கவர்ந்திழுத்துவிட்டார். லெனின் தமது இரண்டாவது தேசப் பிரஷ்ட வாழ்க்கையின்போது, கார்க்கிக்கு அநேக ரசமான கடிதங்கள் எழுதியுள்ளார். இந்தக் கடிதங்களில் லெனினின் மானுஷ்ய உருவம் மிகவும் தெள்ளத் தெளிவாகப் புலப்படுகின்றது. தாம் எதை ஒப்புக் கொள்ளவில்லையோ, எது எதனல் தமக்குத் துயரத்தையோ கோபத்தையோ தருகின்றனவோ, அதையெல்லாம் அவர் ஒளிவு மறைவில்லாமல் நேரடியாகவே கார்க்கிக்கு எழுதிய கடிதங்களில் எழுதியிருந்தார். லெனின் தமது தோழர்கள் அனைவருக்குமே இப்படித்தான் எழுதுவார்; எனினும் கார்க்கிக்கு எழுதிய கடிதங்களில் ஒரு தனிப் பாச உணர்ச்சியும் கலந்து இருந்தது. அவர் எப்பொழுதுமே மிகவும் கண்டிப்பாகவே எழுதுவார். ஆனல் அந்தக் கண்டிப்பிலும் ஒரு பரிவுணர்ச்சியும் கலந்திருக்கும். அந்தக் கடிதங்கள் அனைத்தும் ஏதோ ஒரு உண்மையின் நேரடியான பிரதிபலிப்பாகவே இருக்கும். அவற்றில் உணர்ச்சிப் பரவசமும் இருக்கும். அபாய அறிவிப்பின் எச்சரிக்கைக் குரலும் தெளிவாக ஒலிக்கும். அந்தக் கடிதங்களில் சில உணர்ச்சிகளின் சோகத்தன்மையும், நம்பிக்கைகளின் இனிய உணர்ச்சியும் பிரதிபலிக்கும். தாம் எழுதுவதையெல்லாம் கார்க்கி நன்ருகப் புரிந்துகொள்வார் என்று இலிச் நம்புவது போல் தோன்றும். தமது கருத்துக்களின் துலாம்பரமான உண்மையை கார்க்கி உணர வேண்டும் என்றும் அவர் விரும்பினர்; தமது கருத்துக்களைப்பற்றி காரசாரமாகவும் வாதித்தார்.

லெனின் கார்க்கிக்கு எழுதிய கடிதங்களில், கார்க்கியின்மீது

லெனின் எத்தனை கரிசனை கொண்டிருந்தார் என்பதை எவரும் கண்டு கொள்ளலாம். மக்களிடம் லெனின் எவ்வளவு தூரம் ஈடுபட்டிருந்தார் என்பதையும், அவர்களுக்காக அவர் எவ்வளவு தூரம் உழைக்க முடிந்தது என்பதையும் உணர்ந்து கொள்ள முடியும். கார்க்கியே இதைப்பற்றி அநேக தடவைகளில் எழுதியிருக்கிறார். அதை எல்லோரும் உணர்ந்திருந்தார்கள்.

அலெக்ஸி மாக்ஸிமோவிச்சின் (கார்க்கி) உடல் நிலையைப்பற்றி லெனின் மிகுந்த கவலை கொண்டார் அவரது உடல் நிலையைப்பற்றி லெனின் எப்போதும் விசாரித்தார்; சிறந்த டாக்டர்களைக் கொண்டு சிகிச்சை பெற்றுக்கொள்ளும்படி உபதேசித்தார். கட்டுப்பாடான நியதியோடு வாழும்படியும், இரவு நேரத்தில் வேலை செய்யவேண்டாமெனவும் கேட்டுக்கொண்டார்.

லெனின் தேசப் பிரஷ்ட வாழ்வு வாழ்ந்த சமயத்தில், அவர் உழைப்பாளர்களோடு நெருங்கிய தொடர்பு கொள்ள இயலாது போனதைக் குறித்து மிகுந்த கவலை கொண்டார். தேசப் பிரஷ்ட வாழ்விலும், அநேக உழைப்பாளிகள் இருந்தார்கள் என்பது வாஸ்தவம்தான். ஆனால் அவர்கள் அனைவரும் ஏதாவது ஒரு வேலையில் சேர்ந்து வெகு சீக்கிரத்தில் அதிலேயே சிக்கிவிடுவார்கள்; மேலும் அவர்களது வாழ்க்கை முழுவதும் அங்குள்ள பிரஞ்சுநாட்டு அல்லது ஸ்வீடன் நாட்டுப் பிரச்னைகள் மீதே கவிந்துவிடும். தேசப் பிரஷ்ட வாழ்க்கையின் வடுக்கள் அவர்கள்மீது சீக்கிரத்தில் படிந்துவிடும். இந்தக் காரணத்தினால், வெளிநாட்டுக்கு வந்து சிலகாலமே ஆன உழைப்பாளிகளோடு பழகுவதில்தான் அவர் அனந்தம் கொண்டார். லாங்கிமோவிலுள்ள காப்ரி ஸ்கூலிலிருந்து உழைப்பாளிகளோடு சேர்ந்து உழைப்பதில் லெனினுக்கு மிகுந்த பிரியம் இருந்தது. 1913-ம் வருஷத்தில் தொழிலாளரின் தூதுகோஷ்டியினர் பேரோனினுக்கு வருவதென்றுமுடிவு செய்யப்பட்டது. காப்ரியிலிருந்த கார்க்கிக்கு ருஷ்யத் தொழிலாளர்களைச் சந்திப்பதற்குச் சந்தர்ப்பமே கிட்டவில்லை. இந்த நிலைமை அவருக்கு எவ்வளவு வேதனை தருவதாக இருந்தது என்பதை லெனின் நன்கு உணர்ந்துகொண்டார். எனவே அவர் கார்க்கியை பேரோனினுக்கு வரும்படி செய்தி அனுப்பினர்.

"உங்களுடைய உடல்நிலை இடங்கொடுத்தால், இங்கு வந்து சிலகாலம் இருங்கள். லண்டன், காப்ரி முதலிய இடங்களின் தொழிலாளர்களைச் சந்தித்த பிறகு, தாங்கள் மேலும் சில தொழிலாளரைச் சந்திக்க வேண்டும்" என்று எழுதினர்.

1919-ம் வருஷத்தில் ஜூன் மாசத்தில் லெனின் எழுதிய ஒரு கடிதத்தை நான் இன்னும் வைத்திருக்கிறேன். அந்தச் சமயத்தில் நான் "செந்தாரகை" என்ற பிரசாரக் கப்பலில்சென்றுகொண்டிருந்தேன். அந்தப் பிரயாண அனுபவங்களைப் பற்றி நான் லெனினுக்கு எழுதினேன். அதைக் கண்டு, லெனின், கார்க்கியும் இந்தமாதிரி பிரயாணம் செய்தால் நன்ருயிருக்கும் எனக் கருதினர். "செந்தாரகையில் கார்க்கிக்கும் இடம் கிடைக்குமா என்பதையறிவதற்காக நான் ஒரு தந்தி கொடுத்திருக்கிறேன். கார்க்கி நாளை இங்கு வருகிறார். பெட்ரோகிராடில் வெறும் நரம்புகளின் மூட்டையாகக் கிடக்கும் கார்க்கியை நான் அங்கிருந்து வெளியே இழுத்துவிட விரும்புகிறேன். கார்க்கியுடன் பிரயாணம் செய்வதை நீயும் மற்ற தோழர்களும் மகிழ்வோடு ஏற்றுக் கொள்வீர்கள் என நம்புகிறேன். அவர் ஒரு அருமையான ஆசாமி" என்று அந்தக் கடிதத்தில் அவர் எழுதியிருந்தார்.

# பாரதி பாராட்டிய பாவலன்

## வித்வான். மு. சண்முகம் பிள்ளை

விளையும் 'பயிர் முளையிலே தெரியும்' என்பது பழமொழி. இவ் வாசகம் மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் வாழ்க்கையிலும் பொய்த்துப் போகவில்லை. கவிதை மேலுள்ள இயற்கை விருப்பமும், அவரது தந்தையார் அளித்த தமிழ்க் கல்வியும் பாரதியாருக்கு இளம் வயதிலேயே பெரும் புலவர்க்குரிய தகுதியைக் கொடுத்துவிட்டன. அவர் இளமைப் பொழுதைக் கழித்த எட்டயபுரமோ கலைஞர்களின் இருப்பிடமாக விளங்கிற்று. எட்டயபுர மன்னரும் தமிழ்ப் புலவர்களை ஆதரித்து அன்போடு போற்றினர். இத்தகைய கலைமகள் நிலையமாக விளங்கிய இடத்தில் வாழ்ந்து எல்லாரோடும் உறவாடியது பாரதியாரின் இயற்கை ஆற்றலை இன்னும் பெருக்கி அவருக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தது.

இளமையில் பாரதியார் வாயிலிருந்து பிறந்த பாடல்களை எட்டையபுர மன்னர் கேட்டு, அவரைப் போற்றிப் புகழ்ந்ததுண்டு. சமஸ்தானப் புலவர்களும் இவரது மேதையைக் கண்டு மெச்சினர். அக்காலத்தில் மிகப் பிரபலமாக யாவரும் படித்துவந்த அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச் சிந்தைப் போன்ற சிந்து ஒன்றை இளவயதில் இவர் பாடினார் என்ற நிகழ்ச்சி ஒன்றே இவரது கவிப்புலமைக்குப் போதிய சான்றாகும். அவரது இளமையில் பாடிய பாடல்களெல்லாம் இப்பொழுது நமக்குக் கிடைக்கவில்லை. காந்திமதி நாதபிள்ளை என்பவரைப் பற்றிப் பாடிய,

...காந்திமதி நாதனை

பாரதி சின்னப் பயல்

என்ற வெண்பாவின் இறுதிப் பகுதி வேறு சில சில்லறைத் துணுக்குகளும் இன்று மாதிரிக்குக் கிட்டியுள்ளன. எட்டயபுரத்தில் எத்தனையோ கவிதைகள் பற்பல சந்தர்ப்பங்களில் மலர்ந்திருக்க வேண்டும். அந்த மலர்களெல்லாம் கால வெள்ளத்தில் காற்றிலே மிதந்த கவிதைகளாய்ப் போய் விட்டன.

பாரதியாரின் ஆரம்ப காலக் கவிதைகள் பிற்காலத்தில் பாடிய அதியற்புதமான கவிதைகளைப் போல அமைந்தனவா என்று கேள்வி பிறக்கலாம். தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் பிரதம ஆசிரியர் திருவாளர் ம. பெரியசாமி தூரன் அவர்கள் தற்பொழுது பதிப்பித்து வெளியிட்டிருக்கும் 'பாரதி தமிழ்' என்ற நூலில் 1906-ம் வருடம் வெளிவந்த சில கவிதைகள் தரப்பட்டுள்ளன. அவற்றையும் கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம் முதலியவற்றிலுள்ள கவிதைகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த வேற்றுமை புலனாகும்.

ஆரம்பக் கவிதைகள் கவிதைச் சிறப்பில் விஞ்சி நில்லாது போயினும், பாரதியாரின் வாழ்க்கைச் சரித்திரத்தை நமக்கு விளக்கவல்லதாயிருக்கும். எட்டயபுரத்து வித்துவான்களோடு பழகியிருந்த காலத்தில் பற்பல பொருள் பற்றிய தனிப் பாடல்களும், அக்காலத்து வாழ்ந்த சிலரைக் குறித்துப் பாடப்பெற்ற சில சில்லறைப் பாடல்களும் தோன்றியிருத்தல் வேண்டும். அவைகளில் ஒன்றும் நமக்கு இன்று கிடையாமையால் அவருடைய இளமைப் பருவப் புலமையை நாம் உள்ளவாறு உணரக்கூடவில்லை.

எட்டய புரத்தில் பாரதியார் இளமையில் வாழ்ந்து வந்த காலத்திலே அந்தப் பிரதேசத்தில் மணிமுத்துப் புலவர் என்ற கவிஞர் ஒருவரும் வாழ்ந்தார். மணிமுத்துப் புலவர் பிறந்தது எட்டயபுரத்திற்குக் கீழ்பால் சுமார் ஒன்றரை மைல் தொலைவிலுள்ள இராமனூற்று என்ற ஊராகும். 'சமுத்திர விலாசம்' என்னும் தமிழ்ப் பிரபந்தம் பாடிய கடிகை முத்துப் புலவரின் வமிசத்தில் வந்த நமசிவாயக் கவிஞரிடம் இவர் கல்வி கற்றார். தமிழ்க் கல்வியில் சிறந்து கவிபாடும் பெரும் புலமையும் பெற்றிருந்தார். எட்டயபுர மன்னரின் இளவலாரான இராமசாமிப் பாண்டியர் முத்துச்சாமி என்னும் பெயருடைய இவருக்கு 'மணி முத்து' என்னும் சிறப்புப் பெயரை வழங்கினார். நாளடைவில் இந்தப் பெயர் 'மணிமுத்துப் புலவர்' என்றே எங்கும் நிலைத்துவிட்டது.

மணிமுத்துப் புலவர் தெய்வப்பக்தியுடையவர். திருப்பரங்குன்றம் முதலிய தேவாலயங்களுக்குச் சென்று இறைவனைப் பாடிப் பரவி வழிபட்டனர். வைஷ்ணவ குடும்பத்தில் பிறந்த இவர் எம்மதமும் சம்மதம் என்னும் சமரசக் கொள்கையினராய் எல்லாத் தெய்வங்களைக் குறித்தும் துதிப் பாடல்கள் பாடினார். இவர் பாடிய பாசுரங்களுள் 'லவணமாநதிப் பதிகம்' 'சீதா தடாகப் பதிகம்', 'இராகவ தடாகப் பஞ்சரத்தினப் பா', 'திருவரங்கப் பதிகம்', 'சகஸ்ர திருநாமப் பா' முதலிய பாசுரங்கள் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கன.

இப் புலவர் ஒரு சமயம் தாம் திருமால் விஷயமாகப் பாடிய பாடல்களைச் சுப்பிரமணிய பாரதியார் முன் பாடினாராம். அப்பொழுது சுப்பிரமணிய பாரதியார் மணிமுத்துப் புலவரின் கவித் திறமையைப் பாராட்டிப் பின்வரும் பாடலைப் பாடினார். பாடல் வருமாறு:

**பந்தைத் தெறுமுலைமாப்**
**பால்மொழியி னுங்கரிய**
**எந்தைக்குச் சால**
**இனிக்குமே — விந்தை**
**அணிமுத்துக் கோவையென**
**அஞ்சொலிசை சேர்க்கும்**
**மணிமுத்து நாவலவர்**
**வாக்கு.**

மணிமுத்துப் புலவரின் வாக்கு அழகிய முத்துக் கோவைபோல் இசையமையச் செஞ்சொற்களால் இயன்றுள்ளது; இவ்வாக்குக்கள் உமாதேவியை விடவும் கருநிறங் கொண்ட திருமாலுக்கு மிகவும் இனிப்பாயிருக்கும் என்பதுவே இப்பாடலின் திரண்ட பொருள்.

பாரதியாரின் இளம் பருவத்தில் அவரது பாடலைப் பெறும் பேறு பெற்ற இம் மணிமுத்துப்புலவரைப் போலப் பலர் எட்டயபுரச் சீமையில் இருந்திருக்கக்கூடும். அவர்களையெல்லாம் பற்றித் தெரிந்துகொள்ள நமக்குத் தக்க ஆதாரங்கள் தெரிய வரவில்லை.

இப் பாடல் மணிமுத்துப் புலவரின் குமாரர் முத்தையாப் புலவர் 1935-ல் வெளியிட்ட 'மணிமுத்துப் புலவர் பாடல்' என்னும் நூலில் காணப்படுகிறது. தமது தந்தையாரின் சரித்திரச் சுருக்கம் ஒன்றும் அவர் வெளியிட்டிருக்கிறார். அதில் அவர் மேற்குறித்த பாடலைப்பற்றிக் குறிப்பிடும்போது, "ஒருகால் எட்டயபுரத்தின்கண் நமது தேசாபிமானியும் பாஷாபிமானியுமாகிய சுப்பிரமணிய பாரதியாரவர்கள் வைணவ சித்தாந்தமாக இப்புலவர் பெருமான் இயற்றிய பாசுரங்களைக் கேட்டுத் தமது உள்ளங் களிகூர்ந்து 'பந்தைத் தெறு... நாவலவர் வாக்கு' என்றொரு வெண்பாவால் வியந்துரைத்துள்ளனர்" என்று எழுதியுள்ளார்.

★

திரைப்பட விமர்சனம் :

# விடுதலை

வெங்கடேசன்

நியூ இரா புரொடக்ஷன்ஸாரின் முதல் திரை ஓவியமான 'விடுதலை' அவ்வளவு சோபிதமாக அமையவில்லை. திறமையான முதல்தர டைரெக்ஷனுக்குச் சுட்டிக்காட்டப்படும் ராம்நாத்திடமிருந்து படம்வெளிவருவதால் இவ்வாறு குறிப்பிட வேண்டியிருக்கிறது. சில காட்சிகள் மிக உயர்வாகவும் சில மிகச்சாதாரணமாகவும் காணுவது ராம்நாத் இதில் முழுமனதையும் செலுத்தாததாலோ என்றெண்ண வேண்டியிருக்கிறது.

கதையை இன்பகரமாக முடிக்கும் நோக்கத்தோடுதான், பெரியவர் இரு இளைஞர்களுக்கு உண்மையின் அழியாமையைப்பற்றி கூறுவது போல 'விடுதலை' கதை நமக்குக் காட்டப்படும் முறை கையாளப்பட்டுள்ளது. இதைவிட சாட்சியம் மறைத்த வக்கீல் தண்டனை பெறுவதோடு கதை முடிந்திருந்தால் பார்ப்போர் மனதில் ஆழப் பதிந்திருக்கும். லட்சத்தில் புரளும் வக்கீலின் வீட்டில் 'அரிக்கேன்' விளக்கு எரிவது விந்தையாக உள்ளது. கொலை பாலத்தருகே நடப்பதாகக் கொண்டாலும் போலீஸ் அக்கம்பக்கம் வாழ்வோரை விசாரிப்பது நாம் வாழ்க்கையில் காணும் ஒரு உண்மை. பப்பிளிக் பிராசிகியூடர் வாழும் ஊரில் ஒரு கொலைக் கேசை இவ்வளவு எளிதாகநடத்துவது வியப்பே. தன் தீச்செயல்களை மறைமுகமாக கண்டிக்கும் தமிழ் பாடல்களைத் தற்செயலாகப் பாடும் வேலைக்காரனை வக்கீல் திட்டவாவது திட்டுவார். இதில் எதையும் சகித்துக் கொள்கிறார்! ஜட்காக்காரன் மனைவி தெய்வத்தை வேண்டுவதும், உடனுடன் வக்கீலின் வாழ்வு விழுவதாகக் காட்டப்பட்டிருப்பதும் மிக மிகை. இதே 'effect'ஐ டைரெக்டர் இன்னும் தேர்ந்த முறையில் அடைந்திருக்கலாம். பெண் பிடிக்கவில்லை என்று திவான்ஜி அபிப்பிராயப்படுவதுதான் உலக இயல்பு. நிச்சயதார்த்தத்துக்கு ஏற்பாடு செய்து இப்படி ஏமாறுவதைப் படத்தில் மட்டும்தான் காணலாம். ஒரு வக்கீல் வீட்டுக்கு ஜட்ஜ் வரக்கூடுமா என்பதும், சாட்சியம் அழித்தபெருங்குற்றத்தை, அறிந்துசெய்யும் வக்கீலுக்கு இரண்டு ஆண்டு கடுங்காவலே தண்டனையா என்பதும் நமக்குத் தெரியாது. தெரிந்து செய்யும் குற்றத்துக்கு வக்கீல் வேலையே போய்விடாதா? நிரபராதி ஏழையைக் காக்கத் துடிக்கும் செல்லையா. தான் எழுதின கடிதத்தைப் போலீஸுக்குத் தபாலில் அனுப்பிவிட்டாவது தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும்; போலீஸில் சரணடைந்துவிடுவேன் என்ற சொன்ன செல்லையா கோழைமனதோடு தற்கொலை செய்து அவன் குணச்சித்திரத்துக்கு ஒத்து இல்லை. செல்லையாவின் நல்ல மனதைக்காட்ட உள்ள காட்சிகளே போதும். பத்தாயிரம் ரூபாய்ப் பரிசுச்செய்தியும் அதை யொட்டிய காட்சியும் அவசியமில்லை.

முற்றும்மாறுப்பட்டவேடந்தாங்கி சுயநலத்தின் முழுமையாக நாகய்யா நன்றாக வெற்றிகரமாக நடித்துள்ளார். தான் சொந்தநலனுக்காக வாழ்பவன் என்பதை அவர் ஒவ்வொரு காட்சியிலும் சித்தரிக்கிறார். ஜட்காக்காரனாக வரும் பீர் முகமது நல்ல

அல்லி

# புத்தக உலகம்

தமிழ் : [ஆசிரியர் எஸ். சதாசிவம் கிடைக்குமிடம் இன்பவாழ்வுப் பதிப்பகம், ரத்தின சபாபதிபுரம், கோவை. விலை ரூபாய் ஒன்று]

தமிழ்மொழி தமிழகத்தின் ஆட்சி மொழியாகவேண்டும். பிரிந்து கிடக்கும் தமிழகப் பகுதிகள் ஒன்றுபட்டு புதிய தமிழகம் உருவாகவேண்டும் என்ற உணர்ச்சியும் போராட்டமும் வலுத்துவரும் இந்நாளில் தமிழின் நலம் கருதி எழுதப்பட்டுள்ள இந்த நூல் ஒருவகையில் வரவேற்கத் தக்கதே. எனினும், இந்நூலில் ஆசிரியர் கூறியுள்ள முடிவுகளும், யோசனைகளும் பரிபூரணமாக வரவேற்கத் தக்கவை என்றுகூற முடியாது. தமக்குத்தாமே வகுத்துக் கொண்டே சில கோட்பாடுகள், ஆசாபாசங்கள் முதலியனவற்றுக்கு ஆதரவு நல்கும் கருத்துக்களையும், ஆராய்ச்சி முடிவுகள் ஒத்துக்கொள்ளாத திரிபுகளையும், ஆசிரியர் நாடியிருக்கிறார். உதாரணமாக, தமிழ் நாட்டில் மட்டும்தான் வடநாட்டாரும்பிறநாட்டாரும் சுரண்டுகிறார்கள், ஆந்திர கேரளம் முதலிய அண்டை நாடுகளிலும், பிறமொழிப் பிரதேசங்களிலும் இம்மாதிரியான சுரண்டலுக்கு இடமில்லை என்றுகூறுவது, சங்க காலத்தில் மதம் என்று ஒன்று இருந்ததாகவே தெரியவில்லை என்றுகூறி, அதையொட்டி, பலதிரி

---

நடிகனுக்குரிய அம்சங்களை இப்படத்தில் காட்டுகிறார். தொடக்கத்தில் நன்றாக நடித்த மனேகர் பின்னல் ஏமாற்றம் தருவது கதையில் அவருக்குள்ள குணச் சித்திரக்குறைவே காரணமாகும். சில கணங்களேவரும் ஹைதராபாத் அய்யாசாமி (சர்மா) வெளுத்து வாங்குகிறார். கிருஷ்ண குமாரிக்கும், குமுதினிக்கும் திறமையைக்காட்ட ஒன்றும் இல்லை. நடிப்பு பிரவாயில்லை. சிறுபாகங்களில் வருவோர் சுமாராக நடித்துள்ளனர்.

காட்சி சோடனைகள் பிரமாதமாக இல்லை. ஆனல் இருப்பது இந்தக் கதைச்குப் போதும். வெகுசாதாரணமாக உள்ள வசனத்தை வேலவன் இப்படிப்பட்ட கதைக்கு இன்னும் வேகமாக எழுதியிருக்கலாம். ராம்நாத்தின் படத்தில் எதிர்பார்க்கும் ஒளிப்பதிவு இதில் இல்லை. டாக்டர், வக்கீல் அய்யாசாமியோடு பேசும் கட்டத்தில் ஒலிப்பதிவு குறையோடு உள்ளது. மற்ற இடங்களில் சுமார். பாட்டுகள் ஒரு பின்னணி கீதம் தவிர நன்றுகப் பதிக்கப்பட்டுள்ளன. சங்கீத டைரக்ஷன் பாதகமில்லை. இரண்டு பாட்டுகள் பிரபலமாகலாம். நாகய்யாவின் பாட்டு நன்றாக உள்ளது. கதை அங்கங்கு விறு விறுப்போடும், அங்கங்கு ஆமை வேகத்தோடும் ஓடுவது திரைக்கதையிலோ, 'எடிட்டிங்' கிலோ உள்ள குறை. இப்படிப்பட்ட கதையில் நடனம் இல்லாமலே இருக்கலாம்.

ஒவ்வொரு குணத்திலும் உள்ள ஏற்றத் தாழ்வுகளை டைரக்டர் ராம்நாத் திறமையாகக் காட்டுகிறார். குணமேன்மையும், குணக்குறைவும் பார்ப்போருக்குச் சிரமம் ஏதுமின்றி தெரிவது டைரக்டரின் வெற்றியையே குறிக்கின்றது. செல்லையாவும், ஹைதராபாத் அய்யாசாமியும் போரிடும் கட்டத்தை இன்னும் இயற்கையாக எடுத்திருக்க வேண்டும். பாலக்காட்சி சினிமாக் காட்சிதான்! இயற்கையாக இல்லை. சிற்சில குறைகளை ராம்நாத் தவிர்த்திருந்தால் 'விடுதலை' குற்றமற்ற படம் ஆகியிருக்கும். மொத்தத்தில் பார்க்கவேண்டிய ஒரு படம் விடுதலை.

*

யான கருத்துக்களை வெளியிடுவது, தனித்தமிழ் வெறியினால் பிறமொழிகளைப் பழிப்பது முதலியனவற்றை, பிண்டப் பிரமாணமான உண்மைகளை உணர்ந்தவர் எவரும் ஒப்புக்கொள்ள முடியாது. பொதுவாக, இந்நூலில் ஆசிரியர் கூறியுள்ள கருத்துக்கள் பலவும் இன்றைய திராவிட இயக்கத்தின் கருத்துக்களே. இதை ஆசிரியர் நேரடியாக ஒப்புக்கொள்ளாவிட்டாலும், அவற்றைத்தான் வற்புறுத்துகிறார்.

**நல்லுரை வெண்பா:** ஆசிரியர் ரெ. முத்துக் கணேசன், கிடைக்குமிடம்: நவயுகப் புத்தகாலயம் கல்லுக்கட்டி, காரைக்குடி, விலை ரூபாய் ஒன்று]

இந்நூலில் ஆசிரியர் பல்வேறு நீதிகளைப்பற்றி 30 வெண்பாக்கள் எழுதியுள்ளார். இந்த வெண்பாக்களில் சிறந்த கவிதாம்சமோ, புதிய அரிய கருத்துக்களோ காணப்படவில்லை. சர்வசாதாரணமான செய்யுள் முயற்சி. கவிதையும் கருத்தும் நிரம்பிய பல்வேறு நீதிநூற்கள் மலிந்துள்ள தமிழகத்தில் இந்த 'நல்லுரை வெண்பா' தேவையா என்பதே கேள்வி. 30 வெண்பாக்களும், 40 பக்கங்களும் கொண்ட இந்த நூலுக்கு ஒரு ரூபாய் விலை வைத்திருப்பது அநியாயம். தமிழ் வாசகர்கள் அளகாபுரி மன்னர்கள் அல்ல என்பதைப் புத்தகவெளியீட்டாளர் கவனத்தில் இருத்த வேண்டும். புத்தகத்தின் அச்சும் அமைப்பும் மிக நன்றாயிருக்கின்றன. 'செந்திருவைப்போலே சிங்காரித்தென்ன பயன்?...'

தொ. மு. சி.

**மாஸ்கோவில் ஏசுநாதர்:** [ஆசிரியர்: கே. தாமோதரன். கிடைக்குமிடம்: தேசாபிமானி பிரசுராலயம், நாகர்கோவில் விலை அணா 3.]

ஒடுக்கப்பட்டு வாயில்லாப் பூச்சிகளாக வாழ்ந்த மக்களது வழிகாட்டியாக கிருஸ்து விளங்கினார். கொடுமையையும் சுரண்டலையும் எதிர்த்து நிற்கும்படி அவர் போதித்தார். அவரைப் பின்பற்றிய கிருஸ்து மதஸ்தர்கள் பல்வேறு காலகட்டத்திலும் கொடுமையையும் அடக்குமுறையையும் எதிர்த்து நின்றிருக்கின்றனர். கிருஸ்துவின் கனவுகளை இன்று நனவாக்கி வைத்தது சோஷலிச நாடுகள்தாம். ஆனால் கிருஸ்துவைப் பின்பற்றுகிறோம் என்று கூறி நிற்கும் கிருஸ்துமதத் தலைவர் போப் இந்த சோஷலிஸ்ட் நாடுகளுக்கெதிராக யுத்த பிரகடனம் செய்கிறார். அவரைப் பின்பற்றி இந்தியாவிலும் சில கிருஸ்துவப் பாதிரிகள் பிற்போக்குசக்திகளின் பக்கபலமாக நின்று மக்களுக்கும், கிருஸ்து பெருமானுக்குமே துரோகம் செய்து வருகின்றனர். இவர்களின் சதிகளையும், எப்படி சோவியத் யூனியன் மற்ற சோஷலிஸ்ட் நாடுகளில் கிருஸ்துவின் கொள்கைகளை யதார்த்த உண்மைகளாக மாற்றப்படுகின்றன என்ற உண்மையையும் ஆசிரியர் இச்சிறு பிரசுரத்தில் தெளிவாகவும், சுருக்கமாகவும் விளக்குகிறார்; ஸ்ரீ. எம். எம். அலி யின் மொழிபெயர்ப்பு மிகவும் தெளிவாக இருக்கின்றது.

விபா.



## சென்னையில்

# சோவியத் கலைஞர்கள்

○

"சோவியத் கலைஞர்கள் நாளையே சென்னையை விட்டுச்செல்லுகிறார்களே என்று வருந்துகிறேன். சென்னை மக்கள் உங்களை என்றென்றும் தங்கள் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருப்பர்" என்று சென்னை முதல் மந்திரி ராஜாஜி சோவியத் கலைஞர்களுக்கு அளித்த வரவேற்பில் கூறினர். அவர் கூறியது முற்றிலும் உண்மை. சென்னை மக்களின் ஏகோபித்த அபிப்பிராயத்தையே அவர் பிரதிபலித்தார்.

சமீப காலத்தில் சென்னைக்கு வெளி நாடுகளிலிருந்து எவ்வளவோ தூது கோஷ்டிகள் வந்திருக்கின்றன, போயிருக்கின்றன. ஆனல் சோவியத் கலாச்சார தூது கோஷ்டிக்குக் கிடைத்த மகத்தான மக்களின் வரவேற்பு வேறு எவருக்கும் கிடைக்கவில்லை.

சென்னை நகரில் அவர்கள் தங்கி கலா நிகழ்ச்சிகள் நடத்திய குறுகிய காலத்திலேயே சகல மக்களின் ஏகோபித்த பாராட்டுதல்களைஅவர்கள் பெற்றனர். சோவியத் நாட்டின் கலை மக்களோடு எவ்வளவு நெருங்கித் தொடர்பு கொண்டிருக்கிறது என்பது நம்மால் தெரிந்து கொள்ள முடிந்தது.

சோவியத் கலா நிகழ்ச்சிகளில் கிராமிய நடனங்களும், பாடல்களும் முக்கிய இடம் பெற்றிருந்தன. அவர்களின் நாட்டியங்கள், பாடல்களில் கீழ் தேச மணம் வீசியது.

'பேலே' நடனம் என்பது ருஷ்யாவுக்கே உரிய ஒருவித

உஸ்பெக் நடனராணி
முக்ரம் டர்கன்பேவா



நடனம். இந்த நடனத்தில் உலகப் புகழ்பெற்ற ஸ்ரீமதி மாயா பிளசேட்ஸ்காயாவின் 'பேலே' நடனம், அன்ன நடனம், அஜர்பைஜான் மாகாணத்தைச் சேர்ந்த ரஷீத் பெய்புடாவின் வீணை நாதம் போன்ற குரல், உஸ்பெக் மாகாணத்தைச்சேர்ந்த முக்ரம் டர்கன்பேவாவின் பட்டு நேசவு நடனம் இவைகளை நாம் கண்டு களிக்க முடிந்தது.



பேலே நடனம்: *மாயா பிளசெட்ஸ்காயா, யூரி கோப்மென் இருவரும் நடனமாடுகின்றனர்.*

சோவியத் கலா நிகழ்ச்சிகளில் ஒரு விஷேசம் என்னவேன்றால், அவர்களின் எந்த ஒரு தனி நிகழ்ச்சியும் சில நிமிஷ நேரங்களுக்கு மேல் செல்வதில்லை. இதன் காரணமாக அலுப்பு சலிப்பில்லாமல் மேலும் மேலும் அதிகமாகப் பார்க்கவேண்டுமேன்ற ஆவலைத் தூண்டி விடுகிறது. இந்த அம்சத்தை நமது நாட்டுக் கலைஞர்கள் கவனிக்க வேண்டும். அது மட்டுமல்லாமல் மக்களுடன் கலை எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகத்தோடர்பு கோண்டிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு தான் மக்களின் ஆதரவு இருக்கும் என்ற பேருண்மையையும் அவர்கள் சோல்லாமல் சோல்லி விட்டுச் சென்றிருக்கின்றனர்.

*சோவியத் கலாச்சார உதவி மந்திரி பெஸ்பலாவ் ராஜாஜியைச் சந்தித்தார்*



கலைத் துறையில் சோவியத் யூனியன் அடைந்துள்ள பிரம்மாண்டமான முன்னேற்றத்தை நமக்குத் தேளிவாகக் காட்டுவதுடன் இவர்களின் விஜயம் இந்திய - சோவியத் நல்லுறவையும் பலப்படுத்த உதவியிருக்கிறது.

—'பாஸ்கர்'

Edited and Published by Vai Govindan, SHAKTI Karyalayam 115E Mowbray's Road, Madras, 14. | Printed by A. Ganapathy at Asian Printers, 4, Venkatesa Naicken St., Chepauk, Madras-5.


75